*Kumaraṉ*

*Āram 17, muttu 27*

*February 15, 1940*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஷ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

கோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது. — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 17. காரைக்குடி, பிரமாதி-ஷு மாசி-மீ 3-உ (15—2—40) முத்து 27.

(நமது நிருபர்)

காரைக்குடி இராமகிருஷ்ண விவேகாநந்தர் சங்கத்தில் 12—2—40 திங்கள் மாலை 5-30க்கு ஸ்ரீ பி. ஸ்ரீ தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. தலைவர் தமது முன்னுரையில் ஹிந்தி பொது மொழியாக வேண்டியதின் அவசியத்தைப் பற்றியும் அதை எதிர்க்கும் ஜஸ்டிஸ், சுயமரியாதைக் கட்சியினரின் கொள்கை தவறுனதென்றும் விளக்கிச் சொன்னூர். மேலும் "பதினெட்டு பாஷை படித்தோன் பண்டிதன்" என்று திருமூலர் சொல்லியிருப்பதாயும், பழங்காலத் தமிழர்களுக்கு பாஷைத் துவேஷம் கிடையாதென்றும் குறிப்பிட்டார். ஹிந்தி உபாத்தியார் ஸ்ரீ ராமசாமி ராஜு ஸ்வாமி சத்யதேவ்ஜிக்கு உபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்தார். பின்னர் ஸ்வாமி சத்யதேவ்ஜி "பொதுமொழி எது" எனும் பொருள்பற்றி அரிய பிரசங்கம் செய்தார். தேவகோட்டை ஹிந்திப் பிரசாரகர் ஸ்ரீ சோமசுந்தரம் தமிழில் மொழிபெயர்த்தார். பிரசங்க முடிவில் ஸ்வாமிஜி தாம் எழுதிய கவியை வெகு இனிமையாகப் பாடினூர். கூட்டத்திலிருந்த ஹிந்தி தெரிந்தோர் ஸ்வாமிஜியைத் தொடர்ந்து பாடினர். தலைவர் முடிவுரை கூறியதும் ஸ்ரீ சா. கணேசன் வந்தனம் கூறினூர். ஸ்ரீ ஸ்வாமி சத்யதேவ்ஜி பஞ்சாபில் வசிப்பவர். சிறுவயதிலேயே கல்வி கற்க, பதினேந்து ரூபாயுடன் அமெரிக்கா சென்று அங்குள்ள சர்வ கலாசாலைகளில் உயர்தரப் பயிற்சி பெற்ரூர். மற்றும் அமெரிக்கரின் வாழ்க்கை நிலையை அறிய 2,500 மைல்தூரம் கால் நடையாகவே நடந்து சென்று பழகி அனுபவம் பெற்றவர். இங்கிலாந்து ஜெர்மனி ஆகிய நாடுகளையும் பார்வையிட்டிருக்கிரூர். மகாத்மா காந்தி 1913ல் இவரைத் தென்னிந்தியாவுக்கு அனுப்பி ஹிந்திப் பிரசாரத்துக்கு அடி கோலும்படி செய்தார். இப்பணி முடிந்ததும் சுவாமிஜி வடநாடு திரும்பிவிட்டார். 21 ஆண்டுகள் கழிந்த பின் மீண்டும் தமிழ்நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்கிரூர்.

சுவாமி சத்யதேவ்ஜி இராமகிருஷ்ண விவேகானந்த சங்கத்தில் நிகழ்த்தின பிரசங்கத்தின் சாரம் வருமாறு:—

தென்னிந்திய மக்கள் ஹிந்தியைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்கிற என் நோக்கம் ஓரளவு கை கூடியிருப்பதுபற்றி சந்தோஷப்படுகிறேன். இந்தியாவில் பொது மொழியாக எதை ஆக்கலாம் என்று 29 ஆண்டுகளுக்கு முன் என்னைக் கேட்டார்கள். அப்பொழுதே ஹிந்திதான் பொது மொழியாக ஆக லாயக்குடையதென்று சொன்னேன். ஹிந்தியைத் தவிர வேறு மொழியைப் பொதுவாக வைக்க இயலாது. நம் நாடு வளம் பொருந்திய நாடு பொன் விளையும் பூமி. ரத்னம் கொழிக்கும் தேசம். முப்பத்தைந்து கோடி மக்களைக் கொண்டது. இங்கே பண்டிதர்கள் புத்திமான்கள் நிறைந்திருக்கின்றனர். இல்லாதது இல்லை இங்கே. இத்தனை யிருந்தும் நாம் அடிமைப்பட்டிருப்பதேன்? இதை யோசித்தீர்களா? எத்தனையோ மைல்களுக் கப்பால் கோணல் மாணலான தீவிலுள்ள கொஞ்சம் பேர் நம்மை ஆள்கிரூர்களே.

# பொது மொழி எது?

[ஸ்வாமி சத்யதேவ்ஜி பிரசங்கம்]

இதன் இரகசியமென்ன? அவர்களிடம் ஒருமைப்பட்ட நோக்கம் இருக்கிறது. இதை நான் கண்டேன். அவர்கள் ஒரு பாஷையின் மூலம் ஒற்றுமைப்படுத்தப் பட்டிருக்கிரூர்கள். ஆங்கிலேயர்கள் போர் முரசு கொட்டிக்கொண்டு இங்கே வரவில்லை. சில ஆங்கிலேயர்கள் வியாபாரிகளாக வந்தார்கள். அந்த கொஞ்சம் பேர் பெரும் பாகத்தை ஆள்கிரூர்கள். ஒரு வீரன் ஒரு தேசத்தை ஜெயித்து ஆளலாம், ஆனூல் வியாபாரியாக வந்து தேசத்தை எப்படி ஆளமுடியும்?

சில வெள்ளையர்கள் இங்கேவந்தபோது கூர்ந்து யோசித்தார்கள். பல பாஷை பேசப்படுவதை உணர்ந்தார்கள். மாகாணத்திற்கு மாகாணம் துவேஷமிருப்பதைக் கண்டார்கள்; இவர்களையே சிப்பாய்களாக அமர்த்திக் கொண்டார்கள். புகைச்சலை எரிய விட்டார்கள். ஆண்டு வருகிரூர்கள். இதைப்பற்றி யோசிக்கும் போது துக்கம் தாள முடியாமல் வருகிறது. மாகாணத்துக்கு மாகாணம் துவேஷமா? இந்த மாகாண மனிதன் அடுத்த மாகாண மனிதனை அந்நியனைப் போல் கருதலாமா? இப்படி தங்களுக்குள் காட்டிக் கொடுத்துக் கொண்டு அடிமையாகப் போன விஷயத்தை நினைக்கும் போதெல்லாம் நெஞ்சம் பதறுகிறதே? நமக்குள்ளே எழுந்த எழுச்சியை, உணர்ச்சியை எல்லாம் பல வகையில் அடக்கினர் ஆங்கிலேயர். குற்றவாளி ஆங்கிலேயரல்ல. இவ்வளவு தெரிந்திருந்தும் இன்னும் நாம் ஒரு பாஷை படிக்கவேண்டுவதின் அவசியத்தை உணராமலிருக்கிரேூமே இதுவே நம்முடைய தவறு.

குஜராத்தியைத் தாய் பாஷையாகக் கொண்ட ஸ்ரீ தயாநந்த சரஸ்வதி சொன்னூர்: மாகாண பாஷைகளுக்கும் ஹிந்திக்கும் நெருங்கிய தொடர்பிருக்கிறது. இதுவே பொது மொழியாக லாயக்குடையது என்று. ஆங்கிலேயரின் சிறப்புக்குக் காரணம் கட்டுப்பாட்டுணர்ச்சிதான். அது தான் நம்மிடம் வேண்டும். இல்லாதது இது தான். கற்களிருக்கின்றன; அடுக்கிவிடலாம். சிமிண்ட் வேண்டும் குழைத்துப் பூச. தேசப் பொது மொழியான சிமிண்டினூல் தான் நாம் ஐக்கியப் படுவோம். பொது மொழி யில்லாதவரை ஐக்கியமில்லை. ஐக்கிய மில்லாதவரை முன்னேற்றமில்லை.

ஹிந்தியில் அராபிய வார்த்தைகளைப் புகுத்தினூல் உர்து ஆகிறது. இல்லாவிட்டால் ஹிந்தி. ஹிந்தியில் ஏராளமான சமஸ்கிருத வார்த்தைகளிருக்கின்றன. பல பாஷைகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு பாஷையே பொதுமொழியாக லாயக்குடையது. இன்னும் 50 வருடங்களுக்குப் பின் தேசத்திலுள்ள அனைவரும் ஹிந்தி தங்கள் பாஷை என்று சொல்வார்கள். தங்கள் பாஷையிலுள்ள அதிகமான வார்த்தைகளே இதில் கலந்திருக்கின்றன என்று ஒவ்வொருவரும் உறவுகொண்டாடுவார்கள். நான் சபர்மதி ஆஸ்ரமத்திலிருந்த பொழுது மகாத்மாவை சந்தித்த ஒவ்வொருவரும் என்னையும் பார்த்து விட்டே போவார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்களிடமே மகாத்மாஜி மிக அன்போடு பேசியதாகக் கூறுவார்கள். அப்படி எல்லோரும் ஹிந்தியைத் தங்கள் தங்கள் பாஷையெனக் கூறும் காலம் வர வேண்டும். அப்பொழுது தான் ஹிந்தி தேசியப் பொது மொழியாகும். அப்படி பொது மொழியாவதற்கு லாயக்குள்ள பாஷை ஹிந்தி ஒன்று தான்.

ஹிந்தியை லட்டு மாதிரி சுலபமாகப் புகட்டிவிட என்ன வழியென்று கேட்கிரூர்கள். எடுத்தவுடன் பாடப்புத்தகத்தைத் தூக்கிக் கொள்ளச் சொல்வது பெருந்தவறு. குறைந்தது ஆயிரம் வார்த்தைகளாவது தெரிந்து கொண்ட பின்னரே எழுத்துக்களைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். கல்கத்தாவில் சமஸ்கிருதம் பயின்ற போது படித்துப் படித்தே சாக வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது எனக்கு. முதலில் இலக்கணத்தைப் போட்டு திணிக்கிரூர்கள். முதலில் கல்வி பிறகு தான் இலக்கணம். ஹிந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களுக்கு முதலில் எழுத்துச் சொல்லித் தரலாம். அவர்களுக்குத் தான் வார்த்தை தெரியுமே. பாஷை என்பது கருவி காரியமல்ல. முதலில் பாஷை பிறகு நல்லெண்ணம், இலக்கியம் சமூகச் சீர்திருத்தம். தற்செயலாக ஆங்கிலேயர்கள் தோற்பதினூலோ அல்லது எதிரியின் பலவீனத்தினூலோ நமக்கு சுயராஜ்யம் கிடைக்குமானூல் அதைக் காப்பாற்ற நம்மால் முடியாது. அதற்கு ஒற்றுமையும் உணர்ச்சியும் வேண்டும்.

தரையோடு தரையாக மடக்கிப் போடப்பட்டுக் கிடந்த ஜெர்மனி எப்படி முன்னேறிற்று இருபத்தைந்து ஆண்டில்? என் தாய்நாட்டு மக்களே! ஆயிரம் நாக்கிருந்தால் அந்தக் கதையைக் கொட்டியளப்பேன். நூற்றுக் கணக்கான வருடங்களாக அடிமைப்பட்டுக் கிடக்கிரேூம். எத்தனையோ அடிகள் ஏற்ரேூம். சுக்கூரில் நமது ஸ்திரீகள் தூக்கிச் செல்லப் படுகிரூர்களே கொள்ளையடிக்கப்படுகிரேூமே? சுயராஜ்யத்துக்கு லாயக்கானூமா? இருபத்தைந்தே வருடத்தில் ஜெர்மனி எப்படி முன்னேறிற்று? ஆரோக்கிய முள்ளவனுக்குக் காயம் ஏற்பட்டால் சீக்கிரம் ஆறும். பலவீனமானவனுக்குச் சிறிது காயமானூலும் பல நாட்களாகும். நம்முடைய அரசியல் தேகம் புண்பட்டுப் போய்விட்டது. அதை ஆற்ற வேண்டாமா?

கொஞ்சமாக்ச் சாப்பிடுபவனைப் பார்த்து சாமியார், ரிஷி, யோகி என்கிரூர்கள். எனக்கு விருந்திடுவதென்ருல் பயப்படுகிரூர்கள். நான் நிறையச் சாப்பிடுகிறேனல்லவா! இப்படி கொஞ்சம், கொஞ்சம் சாப்பிட்டு யோகியாகிவிட்டால் பலம் எங்கிருந்து வரும்? மகரிஷி பதஞ்சலி சொல்கிரூர்: "மனிதன் சரீரத்தை ஆரோக்கிய முள்ளதாக ஆக்கிக் கொண்டாலொழியக் கடவுளை அணுகமுடியாது" என்று. உன்னத நோக்கத்தை இழந்து உலகம் அநித்யம், மாயை என்கிரூர்கள். அப்படியானூல் சுயராஜ்யம் ஏன்? இந்த உலகமே ஸ்வர்க்கம் போன்றது. தவறிருந்தால் திருத்தி இதனையே அமர உலகமாகச் செய்ய முடியுமென்ற நம்பிக்கையுள்ளவன்தான் இவ்வுலகத்தில் வாழமுடியும். ஜெர்மானியன், வெள்ளையனைப் பார்த்து "நாங்கள் எட்டுக்கோடிப் பேர், நீங்கள் நாலு கோடிப் பேர், உன்னிடம் ஏராளமான இடம் இருக்கிறது. அதில் எனக்கும் கொஞ்சம் கொடு" என்று கேட்கிரூன். நாமோ உலகம் பொய், அநித்யம் என்கிரேூம், இப்படிச் சொல்லும் வரை நம்முடைய தேசத்தைப் பிறரிடம் ஒப்படைத்து விடவேண்டியதுதானே? இங்கேயுள்ள எல்லோரும் வயது முதிர்ந்தவர்களாகவே ஆகிவிட விரும்புகிரூர்கள். எனக்கு வரவேற்புப் பத்திரம் படிக்கும் போது "தங்கள் தள்ளாத வயதில் இங்கே வந்ததற்கு வந்தனம்" என்றெல்லாம் ஆரம்பிக்கிரூர்கள். நானு கிழவன்? நான் தான் இளைஞன்! நண்பர்களே கிழவன் என்று சொல்லாதீர்கள். (ஸ்வாமிஜிக்கு தற்போது வயது 83)

நான் ஜெர்மனியில் வசித்தபோது எனக்கு வாடகைக்கு வீடு கொடுத்திருந்த ஜெர்மனிய மாது, என் நண்பனைப் போல நான் என் சூட் அணிந்து கொள்ளவில்லை என்று கேட்டாள். "எனக்கேன் சூட்? நான் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேனூ என்ன? நானே கிழவன்" என்று நான் பதில் சொன்னேன். (ஸ்வாமிஜிக்கு அப்பொழுது வயது 56). உடனே அவளுக்குப் பிரமாதமான கோபம் வந்துவிட்டது. "அப்படிச் சொல்லாதீர்கள். இப்பொழுது தான் தங்களுக்கு இளமை ஆரம்பிக்கிறது. என்று அவள் சொன்னூள். கிழத்தனத்தைப் பற்றி அவர்கள் நினைப்பதேயில்லை. ஒருவரை யொருவர் சந்தித்துக் கொள்ளும் போது என்ன சௌக்கியமா என்று கேட்பார்கள்? பட்சியைப் போல ஆனந்தமாயிருக்கிறேன் என்று பதில் வரும். இங்கேயோ சௌக்கியமா என்று கேட்டால் தலைவலி, கால்வலி என்று தான் பதில் கிடைக்கிறது. நாம் ஆரோக்கியமாக ஆகும் போது தான் நமக்கு இவ்வுலகமே சொர்க்கமாகும். வியாதியாகவே இருக்கும் வரை சுயராஜ்யம் வராது. வந்தாலும் தான் காப்பாற்ற முடியுமா? எல்லோரும் தங்கள் தேகத்தை நன்ருக வைத்துக் கொள்ள முயற்சிக்க வேண்டும். ஒழுக்கத்தோடு வாழ வேண்டும். ஜாதி பேதத்தை ஒழிக்க வேண்டும்.

## சென்னை ரேடியோ

### பிப்ரவரி 16உ வெள்ளி

1.00–1.30 } 7.50–8.30 } ஸ்ரீ டி. புட்டுசாமி அய்யா பாட்டு
8.10–8.50 } 8.30–9.00 } கும்பகோணம் ஸ்ரீ ஆர். நாகராஜ ராவ் புல்லாங்குழல்
1.35–2.00 } 9.45–10.30 } ஸ்ரீ டி. எஸ். ஸ்ரீனிவாசராவ் கோட்டு வாத்தியம்
5.20–6.00 ஸ்ரீ எஸ். நாகநாதய்யர் பாட்டு
6.30–7.00 ஸ்ரீமதி வி. எஸ். ராஜம் ஷை

★

### 17உ சனி

1.00–1.30 } 6.30–7.00 } அரியக்குடி ஸ்ரீ ராகவய்யங்கார் பாட்டு
1.35–2.00 } 5.20–6.00 } சத்யக்குடி ஸ்ரீமதி மீனாக்ஷி சுந்தரம் ஷை
6 05–6.30 ஸ்ரீ லக்ஷ்மி நாராயண பாகவதர் ஷை
7.50–9.00 ஸ்ரீ டி. சௌடையா பிடில்

★

### 18உ ஞாயிறு

1.35–2.00 } 10.00–10.30 } ஸ்ரீ பி. ஏ. சாம்பசிவ ஐயர் வீணை
2.00–2.30 } 4.00–4.30 } சிலகலபூடி ஸ்ரீ வெங்கடேஸ்வர சர்மா பாட்டு
5.20–6.00 ஸ்ரீ வி. கங்காதரம் பிள்ளை ஷை.
6 05–6.30 } 9.30–10.00 } ஸ்ரீமதி எஸ். சௌந்திரம் ஷை.
7.50–9.00 செம்மங்குடி ஸ்ரீ சீனிவாசய்யர் ஷை

★

### 19உ திங்கள்

1.00–1.30 } 1.35–2.00 } பாலையூர் ஸ்ரீ கனகசபாபதி ஐயர் பாட்டு
5.20–6.00 பரூர் அனந்தராமய்யர் பிடில்
6.05–6.30 } 9.45–10.30 } ஸ்ரீமதி ஜானகி அம்மாள் பாட்டு
7.50–9.00 திருப்பாம்பரம் ஸ்ரீ டி. என். சுவாமிநாத பிள்ளை புல்லாங்குழல்

★

### 20உ செவ்வாய்

1.00–1.30 } 5.20–6.00 } ஸ்ரீ ஆர். நாராயண சாமி பாட்டு
6.05–6.30 } 7.50–8.30 } ஸ்ரீ சிக்கராம ராவ் ஷை
6.30–6.55 "தெனாலிராமன்" தமிழ் நாடகம்
8.30–9.00 } 9.30–10.30 } தேச மங்கலம் சுப்ரமணிய ஐயர் வீணை

★

### 21உ புதன்

1.00–1.30 } 5.20–6.00 } ஸ்ரீ ஆர். சாம்பசிவன் பாட்டு
1 35–2.00 ஸ்ரீமதி கே. லக்ஷ்மி அம்மாள் ஷை
6.05–6 30 } 7-50–8.30 } வடக்கஞ்சேரி ஸ்ரீ எஸ். எஸ் மணி பாகவதர் ஷை
8.30–9 00 } 9.30–10.30 } ஸ்ரீமதி டி. சந்திரம்மா ஷை

★

### 22உ வியாழன்

1.00–1.30 ஸ்ரீ லக்ஷ்மிதாஸ ராவ் பாட்டு
5.20–6.00 } 10.00–10 30 } குன்னக்குடி ஸ்ரீ வி. வெங்கட்ராமய்யர் புல்லாங்குழல்
6.05–6.30 } 6 50–7.00 } ஸ்ரீமதி அனந்தலக்ஷ்மி நாகராஜன் பாட்டு
7.50–9.00 செம்பை ஸ்ரீ வைத்யநாத பாகவதர் ஷை
9.30–10.00 குமாரி என். சொக்கம்மா வீணையும் பாட்டும்.

### ஹார்மோனிய பகிஷ்காரம்

ஹார்மோனியம் சங்கீதத்தின் மேன்மையைக் குறைத்து, அதன் அபிவிருத்தியையும் தடைப்படுத்துவதற்குக் காரணமாயிருக்கின்றது என்ற காரணம்பற்றி, பிப்ரவரி கடைசியிலிருந்து, அகில இந்திய ரேடியோ நிலையங்கள் அனைத்தும் ஏகோபித்து ஹார்மோனியத்தைப் பகிஷ்காரம் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மேனாட்டு வாத்தியமான பியானோவை இந்திய சங்கீதத்தில் புகுத்தாமல், நமது நாட்டில் புராதன காலங்களில் வழங்கி வந்த வாத்தியங்களுக்குப் புத்துயிரளித்து, அவற்றை முன்னணிக்குக் கொண்டுவர முயற்சிகளும் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன.

## ரூபாயின் வரலாறு

ரூபாய் நாணயத்தின் சரித்திரம் விசித்திரமானது. ஸ்ரீ பிராஸ் ஏ. பெர்னாண்டஸ் என்பவர் இதுபற்றி ஆராய்ச்சி செய்து ஒரு கட்டுரை வரைந்திருக்கிறார். அதன் சாரம் வருமாறு:-

ரூபா என்பது சமஸ்கிருதச் சொல்லாகும். அதன் பொருள் உருவம். ரூபயம் என்றால் வெள்ளி யென்று பொருள். கிரேக்கர்கள்கூடச் செல்வத்தை 'வெள்ளி' எனும் லோகத்தின் பெயராலேயே குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்தியாவில் ரூபாய், மிக முக்கிய வெள்ளி நாணயமாக மாறி விட்டது. சென்ற மூன்று நூற்றாண்டுகளுக்கு மேலாக அதே பெயர் நிலைத்து நின்று வருகிறது.

ஸ்மிருதிகளை ஏற்படுத்திய மனுவும் 'ரூப்ய' என்ற வெள்ளி நாணயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்திருக்கிறார். சூர்வம்சத்தைச் சேர்ந்த ஷெர்ஷா எனும் முஸ்லிம் மன்னர் முதன் முதலாக 16-வது நூற்றாண்டில் 'ருபியா' எனும் பெயரை நாணயத்திற் கிட்டார். அதைத் தொடர்ந்து பிற்காலத்தில் மொகலாயச் சக்ரவர்த்திகளும், ஆங்கிலேயர், டச்சுக்காரர், போர்ச்சுகேயர், பிரஞ்சுக்காரர் ஆகியவர்களும் அந்தச் சொல்லையே உபயோகித்தனர். இங்கிலாந்தில் இரண்டாவது சார்ல்ஸ் அரசர் ஆண்டபோது அரசாங்க உத்தரவுடன் கிழக் கிந்தியக் கம்பெனியார் பம்பாயிலுள்ள தொழிற்சாலையில் நாணயங்களை அச்சிட்டார்கள். 1667ல் தான் முதலாவது ரூபாய் அச்சிடப்பட்டது. 1677ல் வேறு விதமான ரூபாய்கள் அச்சிடப்பட்டன. கம்பெனியார் தயாரித்த நாணயங்களை அங்கங்குள்ள சிற்றரசர்கள் அங்கீகரிக்கவில்லை. 1688-89ல் மொகலாயர்களுடன் இது சம்பந்தமாக ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. அதன்படி கம்பெனியாரே, மொகலாய சக்ரவர்த்தியின் பெயரால் நாணயங்களை உற்பத்தி செய்தனர். இம்முறையைப் பிரஞ்சுக் கம்பெனியாரும் கையாண்டனர். இங்கிலீஷ்காரர் தயாரித்த நாணயங்களில் தாமரையின் உருவமும், பிரஞ்சுக்காரர் நாணயங்களில் பிறையின் உருவமும் பொறிக்கப்பட்டன. மகாராஷ்டிரர்கள் புனாவிலும், பிகால்கோட்டிலும் தங்கள் நாணயங்களைத் தயாரித்தனர்.

போர்த்துக்கேயர்கள், 1666ல் கோவாவில் 'ருபியா' என்ற நாணயத்தை அச்சிட்டார்கள். மைசூர் திப்பு சுல்தானும் ஸ்ரீரங்கபட்டணத்தில் ஓர் நாணயச் சாலையை அமைத்து ரூபாய்களை அச்சிட்டதாகத் தெரிகிறது. டச்சுக்காரர்களும், ஜாவா, படேவியா, இலங்கை முதலிய இடங்களில் ரூபாய் போன்ற நாணயங்களைத் தயாரித்தனர்.

## காந்திஜி படம் தயார்

மகாத்மா காந்தியின் வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டும் சினிமாப் படம் அனேகமாகத் தயாராகி விட்டதாகத் தெரிகிறது. இதைத் தயார் செய்யும் டாக்குமென்டரி பிலிம்ஸார் கூடிய சீக்கிரம் இதை வெளியிடுவார்களாம். ரகுவீர் சிங் என்ற போட்டோ நிபுணர் வார்தாவிலேயே இருந்து வருகிறார். சபர்மதி ஆசிரமம், குஜராத் வித்யாபீடம், சூரத் கைத்தொழிற்சாலை, பர்தோலி முதலிய காட்சிகளை யெல்லாம் பிடித்துவிட்டனர். இந்தப் படத்திற்குத் தான் முதன் முதலாகக் காந்திஜி தமது செய்தியைக் கொடுத்திருக்கிறார். 1931ல் அவர் கதரைப்பற்றி விடுத்த உருக்கமான செய்திதான் இது. பிரான்ஸிலிருந்து ரோமன் ரோலந்துப் படமும் வந்துவிட்டதாம். படத்தின் நீளம் மொத்தம் 12,000 அடி இருக்குமென்று தெரிகிறது. இதுபற்றிய வரலாற்றைத் தொகுத்து எழுதுபவர் 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையின் மாஜி உதவி ஆசிரியர் ராவ்பகதூர் எஸ். வி. சாரி என்பவர்.

---

சென்ற செப்டம்பரிலிருந்து இதுவரை ஜர்மன் அடக்குமுறை காரணமாக 30 லட்சம் போலீஷ் மக்கள் உயிரிழந்ததாக ஒரு பிரஞ்சுப் பத்திரிகை கூறுகிறது.

## திருச்சி ரேடியோ

### பிப்ரவரி 16-உ வெள்ளி

1.35–2.00 ஸ்ரீ ஆர். சீனிவாசன் பாட்டு
5.20–6.00 ஸ்ரீ எம். எஸ். முத்துகிருஷ்ணன் பாட்டு
6.30–7.00 } 8.30–9 00 } திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை சகோதரர்கள் நாதசுரம், நீடாமங்கலம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை தவுல்
7.50–8 30 } 9.45–10.30 } ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள் பாட்டு

★

### 17-உ சனி

1.35–2.00 ஸ்ரீமதி மீனாக்ஷி ராமகிருஷ்ணன் பாட்டு
5.20–6.00 ஸ்ரீ. கே. சாம்பமூர்த்தி ஷை
6.30–7.00 } 8.50–9.20 } ஸ்ரீமதி என். வி. வசந்த கோகிலம் ஷை
7.50–8.30 } 9.45–10.30 } ஸ்ரீ டி. கே. ஜயராம ஐயர் பிடில்
8.30–8.50 'நாடோடி' நாடகம்

★

### 18-உ ஞாயிறு

1.35–2.00 ஸ்ரீமதி டி. ஜே. தர்மாம்பாள் பாட்டு
5.20–5.45 ஸ்ரீ டி. பி. ராமகிருஷ்ணன் ஷை.
6.30–7 00 } 9.45–10.30 } ஸ்ரீமதி டி. ஆர். நவனீதம் புல்லாங்குழல்
7.50–9.20 ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் பாட்டு; மாயவரம் கோவிந்தராஜபிள்ளை பிடில், உமையாள்புரம் கணேசய்யர் மிருதங்கம்

★

### 19-உ திங்கள்

1.35 2.30 ஸ்ரீ கே. வி. தியாகராஜன் பாட்டு
5. 0–6.00 இலுப்பூர், நடேசபிள்ளை நாதசுரம்
6.30–7.00 } 8.45–9.20 } ஸ்ரீமதி எல். டி. சுப்புலட்சுமி (மதராஸ் யுனைடட் ஆர்ட்டிஸ்ட்ஸ் கார்ப்பரேஷன் வாத்திய கோஷ்டியுடன்) பாட்டு
7.50–8.30 } 9.45-10.30 } ஸ்ரீமதி டி. ஞானம்பாள் பாட்டு

★

### 20-உ செவ்வாய்

1.35–2 00 } 6.30–7.00 } மதராஸ் யுனைட்டட் ஆர்ட்டிஸ்ட்ஸ் கார்ப்பரேஷன் வாத்தியகோஷ்டி
5.20–6.00 } 9.45–10.30 } ஸ்ரீ டி. புட்டுசாமி அய்யா பாட்டு
7.50–9.20 அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்கார் பாட்டு, செம்மங்குடி நாராயண ஸ்வாமி அய்யர் பிடில்; தஞ்சை ராமதாஸ் ராவ் மிருதங்கம்

★

### 21-உ புதன்

1.35–2.00 ஸ்ரீமதி ஆர். மதுரம் பிடில்
5.20–5.45 ஸ்ரீ ஏ. எஸ். ராமசுவாமி ஐயங்கார் பாட்டு
6.30–7.00 } 9 45-10.00 } அரக்கிரி ஆர். நாராயண ராவ் பாட்டு
7.50–9.20 திருப்பாம்பரம் ஸ்ரீ டி. என். ஸ்வாமிநாத பிள்ளை புல்லாங்குழல்; மருங்காபுரி ஸ்ரீ எம். ஜி. கோபாலகிருஷ்ணய்யர் பிடில்; தஞ்சை ஸ்ரீ ராமதாஸ் ராவ் மிருதங்கம்

★

### 22-உ வியாழன்

1.35–2.00 } 5.20–5.45 } ஹரிகேசநல்லூர் ஸ்ரீ எம். லக்ஷ்மணன் பாட்டு
6.30–7.00 } 8.30–9.20 } வைணிக ப்ரவீண வீ. வெங்கடகிரியப்பா வீணை
7.00–7.15 'வாழ்க்கை அமைப்புத் திட்டத்தில் வர்ணம்'—ஸ்ரீ வி. சாமிநாத அய்யங்கார் பேச்சு
7.50–8.00 பூட்டிய கதவு—சிறு ஹாஸ்ய நாடகம்
8 00–8.30 } 9.45-10.30 } ஸ்ரீமதிகள் கே. எஸ். தனம் சகோதரிகள் பாட்டு

---

வைத்தியசாலைகள் கட்ட, சென்னை கார்ப்பரேஷனுக்கு, சர்க்கார் 80,000 ரூ கடன் கொடுக்க இசைந்திருக்கிறார்கள்.





## பர்மாவும் எதிர்காலமும்

(திரு. அ. மு. மு. வெள்ளையன் செட்டியாரவர்கள் பிரசங்கம்)

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத் தலைவர் திரு. அ. மு. மு. வெள்ளையன் செட்டியாரவர்கள், M. H. R., உவாக்கமா செட்டியார்கள் சங்கத்தின் நான்காவதாண்டு விழாவில் தலைமை வகித்துச் செய்த சொற்பொழிவின் சாரம் கீழே வெளியிடப்படுகிறது:

★

நம்மனோர் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த காலையில் கொழும்புக்கும், சிங்கப்பூருக்கும் வியாபார நிமித்தம் சென்றதாகத் தெரிகிறது. பஞ்சு வியாபாரம் ஏராளமாகச் செய்தார்களென்றும் நூல்களில் காண்கிறோம். பர்மாவிற்கு வட்டித் தொழில் காரணமாகத்தான் வந்தோமென்றும் தெரிகிறது. இன்று உலகெங்கும் இந்த வட்டித் தொழிலை ஏளனமாக நினைக்கிறார்கள். வட்டித் தொழில் ஒரு இடத்திலேயே உட்கார்ந்து கொண்டு சுகமாகவும் பொறுப்பின்றியும்செய்வதாகக் கருதப்படுகிறது. ஆனதால் தேசப் பிரயாசையில்லாமல் வியாபாரம் செய்வதென்பது மறக்கப்படவேண்டும். தனிப்பட்ட நிலைமையில் இனி வட்டித் தொழில் செய்வதென்பது சாத்தியமாகாது. ஆனதால் சிலரோ, பலரோ சேர்ந்து கூட்டுறவு பாங்கி அல்லது சேர்க்கைத் தொழில் ஆக்கிக்கொள்ள வேண்டும். அப்படி ஏதேனும் பெரிய வியாபாரங்கள் செய்தால்தான் செலவு பெருத்த இன்னாளில் கட்டும்.

ஜப்பான், சைனா, ஐரோப்பா தேசங்களும் தற்போது பெரும் பூசலில் புகுந்திருக்கின்றன. அதன் முகிய காரணம் பொருளாதார ஆக்ரமிப்புத்தான். இல்லாதவர்கள் உள்ளவர்களைத் தோற்கடித்து மூலப் பொருள்களைக் கைப்பற்ற நினைக்கிறார்கள். இதைத் தடுக்கவே இன்று ஆங்கிலேயர் ஜெர்மானியருடன் சண்டை செய்வதாகக் கருதுகிறார்கள். மூலப் பொருள் உள்ள சிறிய தேசங்களைக் காக்க வேண்டித்தான். பிரிட்டிஷார் நினைத்தால் நம்மை அவர்கள் அடிமைத்தனத்தினின்று நீக்க வேண்டிய கடமைப்பட்டவர்கள். இது தான் இன்று காங்கிரஸ் அவர்களைக் கேட்பது. இந்தியா இச்சண்டையில் வியாபார முன்னேற்ற மடைய நல்ல சந்தர்ப்பம் தோன்றியிருக்கிறது. அதை நாம் யாவரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். யுத்தம் ஆரம்பித்த 4,5, மாதங்களுக்குள்ளாகவே இந்தியாவின் வியாபார இருப்பு 80 கோடி இந்தியாவிற்குச் சாதகமாக இருக்கிறது. 1914ம் வருடம் சண்டையில் ஜப்பான் பெருத்த லாபமடைந்தது. நம்மிடம் அவ்வளவு கைத் தொழிலில்லை. இன்னும் மூலப் பொருள்களுக்கு நல்ல விலை கிடைக்குமாகையால் நம்மவர்கள் வியாபாரத் துறையில் இறங்கி ஊதியம் அடைய முயற்சிக்க வேண்டும். வட்டித் தொழில் உலகம் முற்றிலும் வெறுக்கப் பெறுகிறது. ஆகையால் வியாபார முறையைக் கைப்பற்ற முன்வருவீர்களென்று நம்புகிறேன். பின்னே பர்மா வாழ் நம்மவர்களின் சில சிரமங்களைக் கூறுகிறேன்.

### சேவா நிர்ணயச் சட்டம்

குடியாண்மை அல்லது சேவா நிர்ணயச் சட்டம் 12 வருட காலமாகவே பர்மா சர்க்காரின் ஆலோசனையில் இருந்து வந்தது. ஆனால் பர்மா அப்பொழுது இந்தியாவிலிருந்து பிரிக்கப்படவில்லை. ஆனதால் இச்சட்டம் கொண்டுவரத் தாமதப்பட்டது. பர்மா பிரிவினையான பின்பு லாயிட்ஸ் என்பவர் முதன் முதலில் ஒரு சட்டம் இதைக் குறித்துக் கொண்டுவந்தார். விவசாயியும் நிலச்சுவான்தாரும் சரிசமமான பாதுகாப்புப் பெறும்படியாக அந்தச் சட்டம் அமைக்கப் பெற்றிருந்தது. விவசாயி நியாயமின்றி நிலச்சுவான்தாரின் இஷ்டப்படி விரட்டப்பட்டு விடக் கூடாதென்றும் நிலச்சுவான்தார்கள் ஒப்புக் கொள்ளப் பெற்ற சேவாவை அடைவதற்கு யாதொரு விதமான தடையும் இருக்கக் கூடாதென்றும் அந்தச் சட்டத்தில் கண்டிருந்தது. அதற்குப் பலரும் பல திருத்தங்கள் கொண்டு வந்தார்கள். நிலத்தில் விளைந்த அளவில் காலில் ஒரு பாகம் விவசாயி நிலச்சேவா கொடுத்தால் போதும் என்று ஊ சோ ஒரு சட்டம் கொண்டுவந்தார். ஆனால் அது தள்ளப்பட்டது. அதில் சில சீர்திருத்தம் செய்யப்பெற்ற சேவா நிர்ணயத்தைக் குடியாண்மைச் சட்டத்தில் புகுத்தினர். இவ்விஷயம் 5-வது பிரிவில் உள்ளது.

15-வது செக்ஷனில் விளைவு முன் வருடங்களில் கொடுத்த சேவா நிலவரிக்குத் தகுந்தாற் போலவும் இன்னும் பல விஷயங்களையும் அனுசரித்து சேவா நிர்ணயிக்க வேண்டு மென்றும் சொல்லப் பெற்றிருக்கிறது. ரெவின்யூ உத்யோகஸ்தர்—சேவா நிர்ணய உத்யோகஸ்தர் தமக்குத் தோன்றியபடி நிலச் சேவாவை நிர்ணயித்து விட்டனர். 40-வது செக்ஷன் கீழ் இந்த நிலச்சேவா நிர்ணயத்தை விசாரிக்க ஹைகோர்ட்டிற்கும் அதிகாரம் இல்லாதிருக்கிறது.

நிலம் வாங்கவேண்டுமென்ற ஆசையினால் நாம் நிலம் வாங்கவில்லை என்பதும் நாம் கொடுத்த பணத்திற்குப் பிரதியாய் ஒன்றும் திரும்பக் கிடைக்க வழியில்லாதிருக்குமானால் மட்டுமே நிலத்தை ஒப்புக்கொண்டிருக்கிறோம் என்பதும் யாவரும் அறிந்த விஷயம். சேவா நிர்ணயம் சரியில்லாததால் நேர்முகமாக விவகாரம் செய்ய முடியாது. அடிப்படையான காரணங்களைக் கொண்டு இதனை எதிர்ப்பதாக விவகாரம் தொடர்ந்தோம்.

சட்டத்தில் கண்டபடி அந்த அதிகாரி நிலச் சேவாவை நிர்ணயிக்கவில்லை. முதலுக்கு ஆதாயம் கிடைக்கும்படியாக சேவா நிர்ணயிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இந்த ஆபீஸர்களோ எப்பொழுதோ வகுக்கப்பட்ட நில ரேட்டுகளின்படி (1, 2, 3-நம்பர் தரவாரி நிலங்கள் என்று) சேவா நிர்ணயித்துவிட்டார்கள். முதல் நம்பர் நிலம் இப்போது மூன்றும் நம்பராகவும் 2-ம் நம்பர் நிலம் முதல் நம்பராகவும் மாறி மிகுந்த குழப்பத்தை உண்டு பண்ணிவிட்டது. முன் வருடத்திலே நன்றாய் விளைந்த நிலம் மண் வெட்டாததனாலோ உரம் சரியாய் இடாததாலோ, வேறு எந்தக் காரணத்தாலோ இந்த வருடம் விளையாமற் போய்விடுகின்றது. ஆனால் அதற்குச் சேவா மிக அபாரமாக விதிக்கப்பட்டு விடுகின்றது. சில நிலங்கள் ரயில்வே ஸ்டேஷனிலிருந்தும் மில்களிலிருந்தும் வெகு தூரத்தில் உள்ளன. இவ்வித்தியாசங்களை யெல்லாம் கவனிக்காது சேவா நிர்ணயித்துவிட்டார்கள் என்ற நமது வாதத்தை ஹைகோர்ட்டார் ஏற்றுக்கொண்டு சேவா நிர்ணய ஆபீஸர்களின் உத்தரவுகளைத் தள்ளிவிட்டார்கள். இன்னும் இதுபோன்ற மற்ற கேஸ்களையும் ஹைகோர்ட்டு தீர்ப்புச் செய்யலாம். அதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பெற்று வருகின்றன. நாமும் வெற்றி யடைந்தால் உழவர்களிடம் அதிகாரத்தைக் காட்டாத அன்பினால் விட்டுக் கொடுத்துச் சரிக்கட்டிக்கொண்டு போக வேண்டும். இதுதான் வெற்றியின் தத்துவம். இதை நம்மவர்கள் நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

### நிலப் பராதீனச் சட்டம்

மேல் பர்மாவில் சுமார் ஒரு கோடி ஏக்கரில் மற்ற தானியம் விளையக் கூடியதாகவும் கீழ் பர்மாவில் ஒரு கோடி ஏக்கர் நெல் விளையும் நிலமாகவும் உள்ளன. இதில் கீழ் பர்மாவில் உள்ள நிலத்தில் நாலில் ஒரு பங்கு அல்லது சுமார் 25 லட்சம் ஏக்கரே நம் வசம் உள்ளது, நம்மிடத்தில் ஆரம்பத்தில் எப்படி நிலம் வந்தது என்பதை யாரும் ஆராய்ச்சி செய்யவில்லை. ஆனால் இன்று நம்மிடம் இவ்வளவு ஏக்கர் இருக்கிறதே, என்றுதான் இந்த நாட்டுக்காரர் சொல்கிறார்கள். அது உலக வழக்கந்தான். சௌர்சிக்காரர்கள் பழமையை மறப்பது புதுமையல்ல. சட்டமெல்லாம் மிகத் தொந்தரவு விளைவிப்பதால் சேவா விஷயம் தகராறான விஷயந்தான். ஆனால் சொந்தப் பண்ணைவைத்து வெள்ளாண்மை செய்தால் இத்தொந்தரவுகள் அவர்களை அணுகமுடியாது. இந்தச் சட்டமெல்லாம் ஏன் வந்தது என்றால் பாதிக்கு மேலான நிலங்கள் நிலச்சுவான்தார்களிடமிருந்து நீங்கி விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டும் என்பதற்காகவே. விவசாயிகள் அடிப்படைப் பொருள் வலுவு இல்லாதவர்கள். அவர்களுக்கு சாதகம் செய்வதற் கென்றே இச்சட்டம் கொண்டு வரப்பெற்றதாகும். நம்மிடம் அல்லது நிலச்சுவான்தாரிடம் இருக்கும் நிலத்தை நஷ்ட ஈடு தராமல் யாரும் எடுத்துக் கொள்ள முடியாது. பர்மாவின் விளை பொருளிலிருந்து அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் 35 லட்சம் டன் அரிசியில் சுமார் 25 லட்சம் டன்னை இந்தியா வாங்கிக் கொள்ளுகிறது. இந்த நிலப் பராதீனச் சட்டத்தில் மார்ட்கேஜ் (ஈடு) டிக்கிரியில் கட்டுப்பட்ட நிலங்களை வாங்கவேண்டிய இந்த இரண்டு விஷயங்கள் தான் நம்மைப்பாதிப்பனவாயிருக்கின்றன. ஆனால் சட்டசபையில் வாதாடியும் செலக்ட் கமிட்டியிலிருந்து அபிப்பிராயங்கள் கேட்டு வந்தும் மேற்படி விஷயங்கள் நமக்குச் சாதகமாயின. இனி விவசாயிகளிட மிருந்து வெண்ணிலையில் அல்லது புது சட்டம் கொடுத்த தொகையில் வசூலாகா விட்டால் ஒத்திப் பார்த்தல்தான் நமக்கு உண்டு.

### நிலம் வாங்கும் மசோதா

இந்த மசோதாவின் கொள்கையே சரியில்லை. ஆனதால் நாம் இதை எதிர்க்கிறோம். ஒரு மனிதனிடத்திலிருந்து ஒன்றை நாம் வற்புறுத்திப் பெறவேண்டுமானால் அதற்குரிய பெறுமதியையும் அதனால் அவனுக்கு விளையும் நஷ்டத்தையும் ஈடு செய்து கொடுக்கத் தான் வேண்டும். தற்காலம் லாண்டு அக்குவிஷன் சட்டத்தில் பெறுமதியான விலைக்கு மேல் நூற்றுக்குப் பதினைந்து விகிதம் ஜாஸ்தி வேண்டுமெனச் சொல்லப் பெறுகிறது. இன்னும் நிலத்தை ஒரு சேர்வாக இல்லாமல், பல பாகங்களில் சில நிலங்களை மட்டும் அரசாங்கத்தார் வாங்கி விடாமல்—அதாவது நிலத்தைப் பிரித்து விடாமல் சேர்க்கையாக அவர்கள் வாங்கிக்கொள்ள வேண்டுமென விரும்புகிறோம். இன்னும் இது சம்பந்தமாக 100க்கு மேல் திருத்தங்கள் கொண்டுவரப் பெறும்.

### லேவாதேவிக்காரர் மசோதா

'மணி லெண்டர்ஸ் பில்' என்று இதற்குப் பெயரிட்டிருக்கிறார்கள். இந்தச் சட்டத்தில் வட்டி 12, 15க்கு மேல் இல்லை என்று ஒரு பிரிவு கூறுகிறது. நமது கடைகளை ரிஜிஸ்டர் செய்யவேண்டுமென்று மற்றொரு பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது. கணக்குகள் சரியான முறையில் இருந்து வரவேண்டுமென்றும் கூறியிருக்கிறது. இந்தச் சட்டமானது சமீப காலத்தில் பல இடங்களில் வெகு குஷாலாக நிறைவேற்றி வைக்கப்பெற்றிருக்கிறது. இதைப்பற்றி என்ன இடைஞ்சல் நம்மவர்களுக்கு உண்டாகுமென்று நீங்கள் இன்னும் அபிப்பிராயம் தெரிவிப்பீர்களானால் வேண்டிய முயற்சிகள் செய்வோம்.

### இந்தியர் குடியேற்றச் சட்டம்

இந்தியர் இந்நாட்டில் எத்தனை பேர் வசிக்கலாம்? வருட வாரி எத்தனை பேர் வரலாம்? போகலாம்? உத்யோகத்தில் எத்தனை இந்தியர் இருந்துவருகின்றனர் என்ற விஷயங்களை விசாரிக்க ஒரு கமிட்டியை ஏற்படுத்தியுள்ளார்கள். இந்த நாட்டு மக்களின் கைத்தொழில்களையும் வியாபாரங்களையும் இந்தியர் கைப்பற்றிக் கொண்டார்களென்று பர்மியர் நினைக்கின்றனர். ஆயிரம் பேர் இந்தியர் வறுமையுற்று வாடுவோர் இந்த நாட்டில் வருவதைத்

(4-ம் பக்கம் பார்க்க)

## பர்மாவும் எதிர்காலமும்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

காட்டிலும் பத்துப் பேர் அல்லது நூறு பேர் செல்வம் சிறப்புடன் வாழ்வது நல்லது. நம் சகோதரர்கள் வேலையில்லாது பிற நாடு சென்று வறுமைக்குள்ளாவது இந்தியாவுக்குக் கண்ணியத்தைத் தராது. இந்த நோக்கத்தைக் கொண்டு இவ்விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.

### அந்நியர் மசோதா

யுத்தகாரணமாக ஜெர்மனியர்களை இந்நாட்டை விட்டு அகற்றும் நோக்கத்துடன் இந்த மசோதா கொண்டுவரப் பெறுறது. ஆனால் இந்தச் சட்டத்தின் பிரிவுகளை உபயோகித்து இந்தியரையும் அகற்றும்படியான அதிகாரம் அச்சட்டத்தில் தோன்றிற்று. இந்தியர் பர்மாவில் அன்னியர் அல்ல என்று நான் சட்டசபையில் கொண்டுவந்ததிருத்தத்தைஅரசாங்கத்தார் ஒப்புக்கொள்ளாததால், தலைவர் இந்தச் சட்டம் 1935ம் வருடத்திய பர்மா சட்டத்திற்குப் புறம்பானது என்று தள்ளிவிட்டார். இது மீண்டும் சட்டமாகாதபடி கவனிக்க வேண்டும். குடியேறிய நாம் இந்நாட்டின் க்ஷேமத்திற்கு எவ்வளவு தொண்டு செய்ய வேண்டும்; நாம் அதில் எவ்வளவு பங்கு லாபம் அடைய வேண்டுமென்பதுதான் பெரிய பிரச்னை. இதில் இந்நாட்டினர் அபிப்பிராயத்துக்கும் நம்மவர் அபிப்பிராயத்துக்கும் அளவும் ஒற்றுமையும் காலக்கிரமத்தில் ஏற்பட்டு விட்டால் இந்தியப் பிரச்னை தீர்ந்துவிட்டதாகக் கொள்ளலாம்.

---

### "வேலை நிறுத்தம் கூடாது"

சென்னை 'சுதேசமித்திரன்' தொழிலாளர் சங்க ஆண்டு விழாவுக்குத் தலைமை வகித்து ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் பேசும் போது, தொழிலாளர் இயக்கம் உட்பட எல்லா இயக்கங்களுக்கும் சக்தியளிப்பது பத்திரிகையே ஆதலால், பத்திரிகைத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்யும் யோசனையை வைத்துக் கொள்ளக் கூடாதென்று குறிப்பிட்டார்.

---

### பஞ்சாபில் லஞ்ச ஒழிப்பு
### 20 உத்தியோகஸ்தர்கள் மீது புகார்

பஞ்சாப் சர்க்கார் உத்யோகஸ்தர்களிடையே நிலவும் லஞ்சப் பழக்கத்தைப் பரிசீலனை செய்து விசாரிக்க ஒரு தனி இலாகா அமைத்திருக்கின்றனர். இந்த இலாகா இதுவரை 20 பேர் மீதுள்ள குற்றச் சாட்டுகளை விசாரணை செய்திருப்பதாக அஸெம்பிளியில் பிரதம மந்திரி ஸர் சிக்கந்தர் ஹயத்கான் அறிவித்தார். இதில் 7 பேர் ஹிந்துக்கள்; 2 பேர் சீக்கியர்; 5 பேர் முஸ்லிம்கள்; 6 பேர் ஆங்கிலோ இந்தியரும் ஐரோப்பியரும். இவர்களில் செலெக்ட் உத்யோகஸ்தர்களும் உளர்.

---

### ஆ. தெக்கூரில் கும்பாபிஷேகம்

ஆ. தெக்கூர் நகரச் சிவன் கோவில் திருப்பணி வேலை சுமார் நாற்பது வருடங்களுக்கு முன்பு ஆரம்பித்ததாகத் தெரிகிறது. அநேகமாக திருப்பணி வேலை முற்றும் இனிது நிறைவேற விருக்கும் தருவாயில் நகரத்தார் பலரின் அபிப்பிராய பேதத்தால் வேலை அரை குறையாக நின்று விட்டது. கோயில் நல்லதொரிடத்தில், தளம் சுமார் பத்தடிபோல் உயர்த்தப்பெற்று, ரொம்ப அலங்காரமாய் அமைந்துள்ளது. கோபுர வேலைகளைத் தம் நல்ல சிற்பத் திறமையுடன் முடிந்துள்ளன. இது வரை திருப்பணிக்காக சுமார் மூன்று லக்ஷ ரூபாய் போல் செலவாகியுள்ளது. அண்மையில் நடந்த கோட்டையூர், மிதிலைப்பட்டி சிவன் கோவில்களின் கும்பாபிஷேக விழாவைக்கண்ட ஆ. தெக்கூர் நகரத்தார்களுக்கு இப்பொழுது உற்சாக மேற்பட்டுள்ளது. அவ்வூர் நகரத்தார் பிரமுகர்கள் பலர் இதில் பெரிதும் சிரத்தை காண்பித்து தூண்டு கோலாயிருக்கின்றனர். இவர்களது பெருமுயற்சி விரைவில் பலனளிக்குமென நம்பலாம்.

"சிவபக்தன்"

---

காகிதத்தை அளந்து விநியோகிக்கும் முறை பிரிட்டனில் அமுலுக்குக் கொண்டு வரப்படும்.

## பிரான்சில் 20 கை மனிதர்!

பாரிசுக்குச் சமீபம் மியூடான் என்ற இடத்தில் 68 வயதுள்ள ஒரு மனிதர் பக்கவாதத்தால் தாக்குண்டு, தம் உறுப்புகளைத் தாமே இயக்கமுடியாத நிலையில் உயிர்வாழ்ந்து வருகிறார். இவர் பிரஞ்சு செனட் மெம்பராகவும், சுகாதார மந்திரியாகவும், இன்னும் பல உயர் பதவிகளையும் பெற்று சிறப்புடன் விளங்கி, திடீரென பொதுவாழ்க்கையிலிருந்து விலக நேர்ந்ததற்கு இக்கோயே காரணம் 'டாங்கை' இவரே கண்டுபிடித்தாராம். அவர் உடம்பு உயிரற்றதுபோன்ற நிலையிலிருந்தாலும், அவரது மூளை முன்னைவிட இரு மடங்கு அதிக சக்திபெற்று, தாமே தமக்கு உதவியாக ஒரு யந்திரத்தைத் தயாரித்துக் கொண்டார். அவர் அதைத் தம் வாயால் இயக்குகின்றார் மற்றவர்கள் கையாலுங் காலாலும் செய்யும் காரியங்களை இந்த இயந்திரம் அவருக்குச் செய்கின்றது பிரெட்டன் எனும் பெயருடைய இவர் அந்த யந்திரத்தினின்றும் அப்பாற்படுத்தப்பட்டால்வேறு உதவியின்றித் தத்தளிக்க வேண்டியதுதான். இவர் வாயசைத்ததும், ஒரு மின்சாரத் தொடர்பு இருபது 'கை'களை இயக்குகின்றது. ஒவ்வொரு 'கை'யும் நான்கு விதத்தில் இயங்கும் தன்மையதாம். இப்படியாக அவர் தமக்கு வேண்டிய உணவை வரவழைத்துக் கொள்ளலாம். குடிப்பதற்காக, வாயருகில் வைத்துக்கொள்ளலாம்; திரும்ப அது இருந்த இடத்திலேயே வைக்கச் செய்யலாம். ரேடியோ சுவிச்சைப் போடலாம்; தாம் படிக்கும் புத்தகங்களின் பக்கங்களைப் புரட்டலாம்; கரும்பலகையில் பல படங்களைக்கூட வரையச் செய்யலாம். எல்லா வேலைகளையும் இந்த யந்திரமே செய்கிறது.

---

### புதுக்கோட்டை பிரஜைகளின் விஞ்ஞாபனம்

சமீப காலத்தில் மகாராஜாவுக்கு நிர்வாக அதிகாரங்களைக் கொடுக்க வேண்டுமென்று கோரி, புதுக்கோட்டை சட்டசபை மெம்பர்கள் சிலரும், பிரபலஸ்தர்கள் பலருமாகச் சேர்ந்து இந்திய சர்க்கார் அரசியல் இலாகாக் காரியதரிசிக்கு ஒரு விக்ஞாபனம் அனுப்பி யிருக்கின்றனர்.

---

### அஸம்பிளி நிறைவேற்றியது, கவுன்ஸில் நிராகரித்தது!

ஸ்ரீமதி நாராயணி அம்மா கொண்டு வந்த இளமை மணத் தடை மசோதா திருவிதாங்கூர் அஸம்பிளியில் நிறைவேறி விட்டது. அவர் கொண்டுவந்த வரதட்சணைத் தடை மசோதா, பொது ஜன அபிப்பிராயம் அறிவதற்காக ஒத்திவைக்கப் பட்டது.

#### கவுன்ஸில் நிராகரிப்பு

அஸம்பிளியில் நிறைவேறிய இளமை மணத்தடை மசோதாவை ராஜாங்க சபையில் பிரேரித்தபோது அதற்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. ஓட்டுக்கு விட்ட போது 9 பேர் சாதகமாயும் 12 பேர் பாதகமாயும் ஓட்டளித்தனர். 14 பேர் நடுநிலைமை வகித்தனர். எனவே பிரேரணை தோற்றுப் போயிற்று. இம் மசோதா 18 வயதுக்குக் குறைந்த ஆண்களுக்கும், 14 வயதுக்குக் குறைந்த பெண்களுக்கும் மண முடிக்கக் கூடாதென்று தடுக்கிறது. பிரிட்டிஷ் இந்தியாவில் இல்லாத ஒரு விதிவிலக்கும் இதில் சேர்க்கப்பட்டது; அதாவது, பெற்றோர் அல்லது சம்ரக்ஷணை செய்வோர் கேட்டுக்கொண்டால் இந்த விதியினின்றும் விலக்கு அளிக்கலாமென்றும் திருத்தப்பட்டது. எனினும் வைதீகர்கள் திருப்தியுறாமல் மசோதா வெற்றி பெறாது செய்துவிட்டனர்.

---

### ஆஸ்தான வித்வான்கள்

ஸ்ரீமான்கள் செம்மங்குடி சீனிவாசய்யர், ஜி. என். பாலசுப்பிரமணியம், ராஜமாணிக்கம் பிள்ளை, பாப்பா வெங்கட்ராமய்யர், டி. எஸ். மணி எஸ். வைத்திய நாதய்யர் ஆகியோர் திருவிதாங்கூர் ஆஸ்தான வித்வான்களாக நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

---

பீஹாரில் டால்டன் கஞ்ச் எனுமிடத்துக் கருகில் பல இடங்களில் காந்தம் கலந்த இரும்பு ஏராளமாக இருப்பதாக ஒருவர் கண்டு பிடித்திருக்கிறார்.









## பர்மாவில் நிலம் வாங்கும் மசோதா

### இந்தியா சட்டசபையில் கேள்வி

ஜனவரி 7-ந் தேதி இந்தியா அஸம்பிளியில் ஸர் A. H. கஸ்னவி கேட்ட கேள்வியில் பர்மாவில் நிலம் வாங்கும் மசோதா சம்பந்தமாகக் குறிப்பிட்டார். இதற்குப் பதிலளிக்கும் போது கல்வி, சுகாதார, நில மெம்பர் ஸர் கிரிஜா சங்கர் வாஜ்பேயர் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

மசோதாவை வெளியிடு முன் பர்மா சர்க்கார் இந்திய சர்க்காரைக் கலக்கவில்லை. ஆனால் இந்திய சர்க்கார் தங்கள் ஏஜண்டு மூலம் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர். பர்மாவிலுள்ள இந்தியர்களின் அபிப்பிராயத்தை அறிய பர்மா சர்க்கார் ஏற்பாடு செய்துள்ளனர். பர்மாவில் நிலச் சுவான்தார்களாக விருக்கும் இந்தியர்களை இம்மசோதா எவ்வளவு தூரம் பாதிக்குமென்பது இந்த விசாரணையிலிருந்து தெரியவரும். கீழ் பர்மாவிலுள்ள விவசாய நிலங்களில் பாதி, விவசாயிகளல்லாதார் வசமிருப்பதாயும், அங்குள்ள நெல் விளையும் 30 முக்கிய ஜில்லாக்களில், 25 சதமான நிலம் 1937ல் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வசமிருந்ததாயும் பர்மாக் கலக விசாரணைக் கமிஷன் கண்டது. புதிய மசோதாவின் மூலம், இந்தியர்களிடமிருக்கும் நிலங்களை வாங்கிவிட நடவடிக்கை யெடுக்கப்படும் என்ற பயம் இருந்து வருவது இந்திய சர்க்காருக்குத் தெரியவரும். மசோதா செலக்டுக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டுவிட்டது.

---

### யுத்த நிதிக்கு புதுக்கோட்டை ராஜா நன்கொடை

யுத்த நிதிக்குப் புதுக்கோட்டை ராஜா ரூ 10,000 உதவியிருக்கிறார். பிப்ரவரி 5-ந்தேதி வரை புதுக்கோட்டையில் இந்நிதிக்கு மொத்தம் ரூ 14,889 வசூலாயிருக்கிறது. இதில் நகரத்தார் பிரமுகர்கள் பலரும் உதவியது ரூ 4,290.

---

### காலண்டர் வரவு

காரைக்குடி மரம், ஓடு வியாபாரம் மெஸர்ஸ் வ. எம். பொன்னுசாமி செட்டியார் &சன்ஸ் அனுப்பிய அழகிய கிருஷ்ணன் படத்துடன் கூடிய புது வருடக் காலண்டரை வந்தனத்துடன் பெற்றுக் கொண்டோம்.

---

பல்லி, முதலை, மலைப்பாம்பு இவற்றின் தோல்கள் பல விதத்தும் ஏராளமாக உபயோகிக்கப்படுகின்றன. இந்தியாவிலிருந்து மட்டும் ஒரு வருஷத்தில் 25,00,000 தோல்களுக்கு மேல் ஏற்றுமதியாயின.

## முதியோர் கல்வி மகாநாடு

2-வது தென் இந்திய முதியோர் கல்வி மகாநாடு, மதுரை விக்டோரியா எட்வர்ட் ஹாலில் பிப்ரவரி 9உ ஸ்ரீ கே. சந்தானம் M. L. A., தலைமையில் ஆரம்பமாயிற்று. எழுத்தறியாமையைப் போக்கும் போட்டி யொன்றைக் கிராமங்களுக்குள் ஏற்படுத்தி, வெற்றி பெறும் கிராமங்களுக்கு புத்தகசாலை, ரேடியோ, சாவடி, விளையாடு மிடம் முதலியவற்றைப் பரிசளிக்கலாமென்று அவர் தமது உரையில் குறிப்பிட்டார். தூத்துக்குடி நகரசபைத் தலைவர் ஸ்ரீ ரோச் விக்டோரியா முதியோர் கல்விப் பொருட்காட்சியைத் திறந்து வைத்தார். 10-ந் தேதி நடைபெற்ற கூட்டத்தில் மதுரை, அமெரிக்க மிஷனைச் சேர்ந்த மிஸஸ் வில்டர், தமிழுக்கு ரோமன் லிபியை உபயோகிப்பது அதிகப்பலன் தருமென்று சொன்னார். அன்று பிற்பகல் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் மகாநாட்டில் பேசினார். ரோமன் லிபியைவிடத் தமிழ் லிபி மூலம் எளிதாகக் கற்கலாம் என்று அவர் சொன்னார். எழுத்தறியாமையைப் போக்கிக் கிராமங்களிடையே ஒருபோட்டி நடத்துமாறு சர்க்காரை கேட்டுக் கொள்வதாயும், புத்தகசாலைகள், வாசகசாலைகள் பராமரிப்பது, துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுவது முதலியன ஸ்தல ஸ்தாபனங்களின் முக்கிய ஊழியமாக இருக்க வேண்டுமென்றும் யூனிவர்ஸிட்டி பட்டதாரிகளுக்குப் பட்டமளிக்குமுன் அவர்கள் ஒரு வருஷ காலம் கிராம முன்னேற்ற ஊழியத்திலும், கல்வியறிவின்மையைப் போக்குவதிலும் ஈடுபட்டிருக்க வேண்டுமென்று நிபந்தனை விதிக்கப்பட வேண்டுமென்றும், ஸ்தல ஸ்தாபனங்கள் பெண்கட்குக் கல்வி யறிவூட்டப் பெண்களை நியமிக்க வேண்டுமென்றும், முதியோர் கல்விப் பிரசார ஸ்தாபனங்கள் அமைக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்வதாகத் தீர்மானங்கள் நிறைவேறின.

---

### ஷண்முகசுந்தர கிராமணிக்கு மரண தண்டனை

நாகம்மாள் என்ற தன் வேலைக்காரியைக் கொலை செய்த குற்றத்திற்காக ஷண்முகசுந்தர கிராமணிக்கு மரண தண்டனையும், சாட்சியம் மறையக் காரணமாயிருந்ததாக, அவர் மனைவி சாரதாம்பாளுக்கு இரண்டு வருடக் கடுங்காவலும், தங்கவேலு முதலிக்கு மூன்று வருடக் கடுங்காவலும் விதிக்கப்பட்டன. சென்னை ஹைக்கோர்ட் செஷன்ஸில் ஜஸ்டிஸ் மாக்கட் முன்பு இவ்வழக்கு ஜனவரி 2ம் தேதி ஆரம்பித்து 26 நாள் நடைபெற்றது. மொத்தம் 40 சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர்.

## ஜின்னா-வைஸ்ராய் சம்பாஷணை

பிப்ரவரி 6-ந்தேதி ஜனாப் ஜின்னா, மே. த. வைஸ்ராயைச் சந்தித்து ஒரு மணி நேரத்துக்கு மேல் பேசினார். மைனாரிடிகளின் நியாயமான நன்மைகளைப் பாதுகாக்கவேண்டியதன் அவசியத்தை பிரிட்டிஷ் சர்க்கார் நன்கு உணர்ந்திருக்கின்றனரென்றும், அதன் முக்கியத்தை அவர்கள் அலட்சியஞ் செய்துவிடுவார்களென்று ஜனாப் ஜின்னா அதைரியப்பட வேண்டியதில்லை யென்றும் வைஸ்ராய் உறுதி கூறினார்.

---

### க்ஷயத்துக்குக் கரும்பு பரிகாரம்

போபாலில் க்ஷயரோகத்துக்கு மருந்தாக உதவும் கரும்புகளை ஒருவர் பயிரிட்டு வருகிறார். இந்தக் கரும்புக்கு இறந்த நல்ல பாம்பை எருவாக வைக்கிறார்கள். முதல் முதலில் காலஞ்சென்ற ஹகீம் அஜ்மல் கான் இந்த கரும்பைக் கண்டுபிடித்தார். மீரத்திலிருந்து ஒருவர் இந்த கரும்புகளைப் போபாலுக்குக்கொண்டு வந்ததாகத் தெரிகிறது.

---

### ரயில் வண்டிகளில் தொட்டில்

ரயில் வண்டிகளில் பெண்கள் கம்பார்ட்மென்டுகளில், குழந்தைகளுக்குத் தொட்டில்கள் வைக்கவும், சில ஸ்டேஷன்களில் பெண்கள் தங்கியிருப்பதற்குத் தனி ஏற்பாடு செய்யவும் வேண்டுமென சமீபத்தில் நடைபெற்ற தென்னிந்திய ரயில்வே ஆலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் சொல்லப்பட்ட யோசனையைப் பரிசீலனை செய்வதாக ஏஜண்டு கூறினார்.

---

### கண்டரமாணிக்கம் நித்தியானந்தா ஸ்போர்ட்ஸ் கிளப்

டி கிளப் மெம்பர்களால் டி கிளப் நிதிக்காக தை 22உ (4-1-1940) இரவு 9-30 மணிக்கு மனோஹரா என்னும் டிராமா அதி விமரிசையாக நடிக்கப்பட்டது.

---

மலையான ஜில்லா போர்டிலுள்ள 52 ஸ்தானங்களில் காங்கிரசுக்கு 35 ஸ்தானங்கள் கிடைத்திருக்கின்றன. இதில் முஸ்லிம்களுக்கு 9, இந்தியக் கிறிஸ்தவருக்கு 2, ஹரிஜனங்களுக்கு 2 கிடைத்திருக்கின்றன. சுயேச்சை வாதிகளுக்கு 16 கிடைத்திருக்கிறது.

## அதிக லாப வரி மசோதா

### தனிக்கமிட்டிக்கு அனுப்பப்பட்டது

மத்திய அஸம்பிளியின் வரவு செலவுத் திட்டக் கூட்டம் பிப்ரவரி 6உ ஆரம்பமாயிற்று. நிதி மெம்பர் ஸர் ரெய்ஸ்மன் அதிக லாப வரி மசோதாவைத் தனிக் கமிட்டிக்கு விடவேண்டுமென்று பிரேரித்தார். மார்ச் 6-ந் தேதிக்குள் கமிட்டி தனது அறிக்கையை சமர்ப்பிக்கவேண்டும். பலர் எதிர்த்தும் சிலர் ஆதரித்தும் பேசினர். கூட்டத்திற்கு காங்கிரஸ் மெம்பர்கள் யாரும் செல்லவில்லை. 10-ந் தேதியும், 12ந்-தேதியும் இம்மசோதாபற்றிய விவாதம் தொடர்ந்து நடைபெற்றது. கடைசி தினத்தன்று, மசோதாவைத் தனிக்கமிட்டிக்கனுப்ப வேண்டுமென்ற பிரேரணை அதிகப்படியான ஓட்டுகளைப்பெற்று நிறைவேறியது. மசோதாவைச் சுற்றறிக்கையாக வெளியிட வேண்டுமென்ற பிரேரணை தோல்வியுற்றது.

---

### பட்டரைக் கொலைசெய்ததாக

மதுரையில் சுப்ரமண்யக் குருக்கள் என்பவரைக் கொலைசெய்ததாக ஸ்ரீ தியாகராஜ சிவம் பேரில் மதுரை நகர மாஜிஸ்திரேட் கோர்ட்டில் தொடரப்பட்டிருக்கும் வழக்கின் விசாரணை 1-3-40ல் நடைபெறும்.

குமரன்

காரைக்குடி
பிரமாதி-௵ மாசி-மீ 3-உ

## வைசிராய்—மகாத்மா

வைசிராய் அழைப்பை யேற்று மகாத்மா டெல்லி சென்ருர். மாளிகையினுள் சென்று சில வார்த்தை பேசியதும் பேச்சு நீளவில்லை யென்று தெரிகிறது. இந்தியாவுக்கு அரசியலை நிர்ணயிப்பது நாங்களா நீங்களா என்பதிலேயே விஷயம் நின்று விட்டதென்று கூற வேண்டியதில்லை. இந்தியாவுக்கு அரசியல் சுதந்திரம் வேண்டுமென்று காங்கிரஸ் கேட்கிறது. கொடுக்க வேண்டியதுதான் என்று பிரிட்டிஷார் ஒத்துக் கொண்டாய்விட்டது. எப்படி? எப்பொழுது? என்ற இரு கேள்விகட்குப் பதில் வேண்டும். இவ்வளவு தான் இன்றைய நிலை! இதை முடிவு செய்யவே வார்தா—டெல்லிப் பேச்சு நடக்கிறது. இந்த முறை வைசிராய் மகாத்மாவை அழைத்தவுடன் விஷயம் தெளிவாக முற்றுப் பெற்று விடுமென்று பலரும் எதிர்பார்த்திருந்தனர். ஆனல் அது பெரிய ஏமாற்றத்தையே தந்துவிட்டது. வைசிராய்—மகாத்மா பேச்சு வெகு சுருக்கமாக முடிந்தாலும் 'சண்டே டைம்ஸ்' நிருபருக்கு இந்தியா மந்திரி பேட்டியளித்துக் கூறிய விஷயங்கள் நீண்டதொரு அறிக்கையாக இருக்கிறது. மந்திரி ஜெட்லண்ட் பிரபு எப்பொழுது பேசினலும், பிறருக்கு ஆக்ரிர முண்டுபண்ணும் படியாகவே அப்பேச்சு இருந்து வருகிற தென்னலாம். என்ருலும் விஷயங்களை ஓரளவு விளக்கமாகவே சொல்லிவிடுகிருர். ஆனல் அதற்குப் பிறகும் வைசிராய்—மகாத்மா சந்திப்புக்கு இடமில்லாமல் அவர் பேச்சு அமைந்து விடுகிறதில்லை.

ஜெட்லண்ட் பிரபு பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் தனிப்பட்ட பல ஒற்றுமையும் பரஸ்பரக் கூட்டுறவு மிருந்து வருவதாகவும், அவை என்றும் இருந்து வரவேண்டு மென்றும், அந்தக் கூட்டுறவு அறுபட்டால் இரு நாடுகட்கும் நன்மை ஏற்படா தென்றும் குறிப்பிட்டிருக்கிருர். இந்தக் கருத்தை ஏறக்குறைய இந்தியர்கள் அதிலும் மகாத்மா பூரண மனத்துடன் தெரிவித்திருப்பதை உலகம் அறியும். இந்திய அரசியல் விஷயத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வரும்போது வகுப்புப் பிரச்னைக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கூறிவருகின்றனர். இந்தியாவில் வகுப்புப் பிரச்னையைத் தீர்த்த பிறகு தான் அரசியல் சுதந்திர மளிக்க முடியுமென்று உண்மையாகவே சொல்லப்படுமானல் "இந்தியாவுக்கு சுயராஜ்யமேகிடையாது" என்று சொல்லி விடலாம். விஷயம் அப்படித்தான் முடியும். ரஷ்யா அன்னியரிட மிருந்தால் ட்ராட்ஸ்கி கட்சியும் சம்மதித்தாலல்லது சுயராஜ்ய மில்லை யென்று சொல்லலா மல்லவா? பூலோகத்திலுள்ள எல்லா ராஜ்யத்திலும் ஒரே கட்சியும் ஒரே பிரிவும் ஒரே மனப்பான்மையும் இருப்பதில்லை. இருக்கிற பிரிவு முழுமையும் சமரசம் செய்து கொண்டுதான் அரசியல் சுதந்திர மளிப்ப தென்பது மனித யோசனைக்கு உட்படுவதன்று. இன்று ஹிந்து-முஸ்லிம் பிளவு பெரிதென்று கூறப்படுகிறது. இது மதவாரி விவகாரம், பிறகு மாகாண வாரி விவகாரம், அப்பால் பாஷை வாரியாக, அதற்கு மேல் ஜாதி வாரியாக வரலாம். எல்லாவற்றையும் நீக்கி விட்டுத் தான் சுயராஜ்யந் தருவ தென்ருல், விஷயம் பூர்த்தியாவதில் வழவழாவைத் தவிர வேறென்றும் ஏற்படப்போவதில்லை யன்றோ? மைனுரிட்டி என்பதற்குக் கொடுக்கப்படும் கௌரவமும் தாழ்மையும் பிரிட்டிஷாருடைய மனப்பான்மையைப் பொறுத்ததே யன்றி வேறென்ன?

மதத்தில் தலையிடுவதில்லை யென்று இந்திய கவர்ன்மெண்டு ஒருகொள்கையை வைத்துக் கொண்டிருந்தது. ஆலயப் பிரவேசத்துக்கு 20 கோடிப் பேர் தயாராக இருந்த 100 சனதனிகள் எதிர்த்தாலும் மதத்தில் தலையிடுவதில்லை யென்ற பல்லவியைச் சொன்னர்கள். மதுரைக் கோவில் திறக்கப்பட்டது. சனதனிகள் சத்தமிட்டனர். விஷயம் பூர்த்தியாகி விட்டது. இந்தமாதிரி சிறிதைப் பெரிதாக்கி சாக்குச் சொல்வதும் பெரிதைச் சிறிதாக்கிச் செயலில் ஆக்குவதும் பிறவும் பலம் பொருந்திய பிரிட்டிஷ் அதிகாரிகளிடமே உள்ளன வென்பதில் ஐயமென்ன? அரசியல் பேச்சு இன்னும் உண்டென்ரு இல்லையென்ரு முடிவாகி விடவில்லை யென்பதற்கு இந்தியா மந்திரி மகிழ்ச்சியடைவது போலவே அரசியலில் ஊக்கமுடைய யாவரும் மகிழ்ச்சியடைவ ரென்பதில் ஐயமில்லை. இந்தியருடையவும் அதன் ஒப்பற்ற தனிப் பெரும் தலைவருடையவுமான பரிசுத்த ஹிருதயத்தோடு இலங்கி ஏற்படும் முடிவே இரு நாடுகட்கும் நன்மை தருவதாகு மென்று கூற விரும்புகிறோம்.

### காரைக்குடி நகர சபை

சென்ற சனிக்கிழமை நடைபெறுவதாயிருந்த ஷ நகர சபையின் சாதாரணக் கூட்டம், அன்று போதுமான அங்கத்தினர்கள் வாராததால் (மொத்தம் 3 பேரே வந்திருந்தனர்) ஒத்தி வைக்கப்பட்டது.

### உதவி நாடகங்கள்

முனிசிபல் அபீஷியல்ஸ் ரெக்ரியேஷன் க்ளப் நிதிக்காகவும், S. M. S. ஹைஸ்கூல் மாணவர் கல்வி நிதிக்காகவும் காரைக்குடி முனிசிபல் அபீஷியல்ஸ் பார்ட்டி & O. B. A. மனேரஞ்ஜனி சபையார் காரைக்குடி ஷண்முகவிலாஸ் எலக்ட்ரிக் தியேட்டரில் 15-2-40 வியாழக்கிழமை இரவு "தேச பக்தி" என்னும் நாடகத்தையும், 17-2-40 சனிக்கிழமை இரவு "பூகைலாஸ்" என்னும் நாடகத்தையும் தமிழில் நடத்துவார்கள்.

### கனடா கவர்னர்ஜெனரல் மரணம்

கீழே விழுந்து மண்டையில் அடிபட்டு அதன் பயனுக மும்முறை ஆப்பரேஷன் செய்தும் பலனின்றி, கனடா கவர்னர் ஜெனரல் லார்டு டுவீட் மியூர் பிப்ரவரி 11-ந் தேதி மரணமானர்.

### ரயில்வே கட்டணங்களை உயர்த்த?

ரயில்வேக் கட்டணங்களை உயர்த்த சர்க்கார் உத்தேசித்துள்ள விஷயம் 16-ந் தேதி மத்திய சட்டசபையில் தெரிவிக்கப்படுமென்று தெரிகிறது.

### ஜில்லா கலக்டர் தர்பார்

(நமது நிருபர்)

10-2-40 மாலை 5 மணிக்கு, சிவகெங்கை ராஜா உயர்தரக் கலாசாலையில் ஜில்லாக் கலக்டரின் தர்பார் நடந்தது. கலாசாலை ஹாலில் அவருக்குத் தங்க சிம்மாசனம் போடப்பட்டிருந்தது. டிப்டி போலீஸ் சுப்பிரண்டு ஸ்ரீ அப்பாதுரைப் பிள்ளையின் உத்யோக சரித்திரத்தையும் அவரது ஊழியத்தையும், கண்டுபிடித்த கேசுகளையும்விளக்கிப்பேசிவிட்டு,கலக்டர் அவருக்கு "ராவ்சாகிப்" என்ற பட்டத்தை அளித்தார். 5-30 மணிக்கு மைதானத்தில் ஒரு சிற்றுண்டி விருந்து நடைபெற்றது. சிவகெங்கை ராஜா, திவான் முதலிய பலர் கலந்து கொண்டனர். அரியக்குடி ஸ்ரீ ராமானுஜய்யங்காருடைய சங்கீதக் கச்சேரியுடன் இரவு 8 மணிக்கு வைபவம் முடிந்தது.

---

ஹிந்து மகாசபைத் தலைவர் டாக்டர் மூஞ்சே பிப்ரவரி 12-ந் தேதி வைஸ்ராயைக் கண்டு பேசினர்.

## கோயரிங்கின் சமாதானத் திட்டம்

மார்ஷல் கோயரிங் ஒரு சமாதானத் திட்டம் அமைத்திருப்பதாகவும் அதற்கு ஹிட்லர் அங்கீகாரமளித்து விட்டதாகவும் ஸ்டாக்ஹோமிலிருந்து செய்தி கிடைத்திருப்பதாக நியுயார்க் ரேடியோ கூறுகிறது. அத்திட்டம் ஆறு அம்சங்களைக் கொண்டதாகும். அவை வருமாறு:- (1) எந்த நாடும் நஷ்ட ஈடு கோரக்கூடாது. (2) மகாநாட்டு முறைமூலம் பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்க்கவேண்டும். (3) ஸூடடன் பிரதேசம் ஜெர்மனியின் வசமே இருந்து வரவேண்டும். (4) வெர்ஸேல்ஸ் உடன்படிக்கைக்கு முன் தன் வசமிருந்த போலிஷ் பிரதேசங்களை ஜெர்மனி திரும்பப் பெறவேண்டும். (5) ஆஸ்திரிய, ஜெர்மன், பிரஞ்சு, பிரிட்டிஷ் மேற்பார்வையின் கீழ் ஆஸ்திரியாவில் சர்வஜன வாக்குக் கணக்கெடுக்க வேண்டும். (6) ஜெக், போலிஷ் பிரதேசங்கள் சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்வதென ஒரு ஜெர்மன், பிரெஞ்சு, பிரிட்டிஷ் கமிஷன் முடிவு செய்யவேண்டும்.

### காரைக்குடி ஹரிஜன் ரெசிடென்ஷியல் ஸ்கூல்

(நமது நிருபர்)

காரைக்குடி ஹரிஜன் ரெசிடென்ஷியல் பள்ளியில் படித்து வருகிற பையன்களுக்குத் தோட்ட வேலை கற்பிக்குமாறு கமிஷனர் உத்தரவிட்டிருக்கிரர். அங்குள்ள தலைமை உபாத்தியாயர் இவ்வுத்தரவை அமுல் நடத்த முயற்சிக்கையில் பையன்கள் அதை வெறுத்தனராம். வேலை பார்க்கப் பிரியப்படாத அந்த 20 பையன்களும் 6-2-40 அதிகாலை பள்ளியை விட்டுச்சென்றனர். பையன்களில் சிலர் கமிஷனரைச் சந்தித்தனர். கமிஷனர் புத்திமதி சொல்லி மீண்டும் பள்ளிக்குப் போகுமாறு சொன்னர். பையன்கள் போகவில்லை. ஹாஸ்டல் விதியை மீறி பையன்கள் வெளியே சென்றுவிட்டார்களாதலால் அவர்களை நீக்கிவிட்டு, புதிதாக சேரவிரும்பும் பையன்களைச் சேர்த்துக் கொள்ளலாம் என்று கமிஷனர் உத்தரவிட்டிருக்கிறதாகத் தெரிகிறது.

### மகாத்மாவின் அலுவல்கள்

பிப்ரவரி 15உ மகாத்மா காந்தி சாந்தி நிகேதனத்துக்குப் போவார். டாக்டர் தாகூருடன் இரண்டு நாள் தங்கிவிட்டு அவர் 19, 20-தேதிகளில் நடக்கவிருக்கும் காந்தி சேவா சங்கக் கூட்டத்துக்காக மாலிகண்ட (டாக்கா) என்றவிடத்துக்குச் செல்வார். அங்கு 25-உ பகல் மகாத்மா ஒரு பிரசங்கம் செய்வார்.

### இந்தியாவுக்குப் புதிய அரசியல்

இந்தியாவுக்குப் பூரணக் குடியேற்ற நாட்டந்தஸ்து அளிக்கும் முறையில் ஒரு அரசியல் திட்டத்தை நிர்ணயிக்க இரு சபைப் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட வேண்டுமென்று சர்தார் சாந்த சிங்கும், 1941-ம் வருஷத்தில் குடியேற்ற நாட்டந்தஸ்து அளிக்க வேண்டுமென மௌல்வி அப்துல் ரஷீத் சௌத்ரியும் மத்திய அசம்பிளியில் தீர்மானங்கள் கொண்டுவரப்போவதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

### 'தினமணி' ஆபீஸில் தீ விபத்து

பிப்ரவரி 9உ இரவு சென்னை "தினமணி, இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகைகள் ஆபிஸில் தீப்பிடித்தது. நெருப்பணைக்கும் எஞ்சின்கள் வந்து அணைத்தன. கட்டிடத்தின் கீழ் பாகம் எரிந்து விட்டதாம். சில யந்திரங்களும், காகிதக் கட்டுகளும் எரிந்து போனதாகத் தெரிகிறது. இது சம்பந்தமாக சென்னை கவர்னர் ஷ பத்திரிகைகளின் நிர்வாகிகளுக்குத் தமது அனுதாபத்தைத் தெரிவித்திருக்கிருர்.

### தகராறு நீங்க வழி

லண்டன் 'டெய்லி ஹெரால்டு'ப் பத்திரிகைக்கு காந்திஜி அனுப்பியுள்ள தந்தியில், பிரிட்டன் இந்தியாமீது தனக்குள்ள யோக்கிய மற்ற பிடிப்பை விட்டுவிட்டால், அதன் கட்சியே யோக்கியமான தென நிரூபணமாவது திண்ணமென்றும், பின்னர் யுத்தத்திலும் வெற்றியேற்படுவது நிச்சயமென்றும் குறிப்பிட்டிருக்கிருர்.

## ஜர்மன் சப்மரீன்கள் மூழ்கடிக்கப்பட்டன

ஹாலந்துக்கும் அமெரிக்காவுக்குமிடையில் போக்கு வரத்து நடத்திவரும் 'பாஜர்டிக்' என்ற கப்பல் ஜர்மன் சப்மரீன் டார்ப்பிடோ குண்டால் தாக்கப்பட்டு மூழ்கிற்று. இக்கப்பலில் பெரும் பகுதியும் டச்சுக்காரருக்குச் சொந்தமான சரக்குகளே ஏற்றப்பட்டிருந்தன. கிடார் ஹோம் என்ற நார்வேக் கப்பலும், வின்டா என்ற எஸ்தோனியக் கப்பலும் மூழ்கடிக்கப்பட்டன. கடற்படைப் பாராவுடன் சென்று கொண்டிருந்த வியாபாரக் கப்பல்களின் கோஷ்டி ஒன்றைத் தாக்கிய 2 ஜர்மன் சப்மரீன்களை ஒரு பிரிட்டிஷ் நாசகாரி தாக்கி மூழ்கடித்தது.

### மேற்குப் போர்முனை

பிப்ரவரி 9-ந்தேதி மேற்குப் போர்முனையில் ரோந்துக் கோஷ்டிகளிடையே பல விடங்களில் போர் நடந்தது. 15 ஜெர்மனியர் கொல்லப்பட்டனர்.

### வல்லரசுகளுக்கு அமெரிக்க தூதர்

இத்தாலி, பிரான்ஸ், ஜெர்மனி, பிரிட்டன் இந் நாடுகளிலுள்ள நிலைமையை நேரில் கண்டறியும் பொருட்டு உதவி மந்திரி மிஸ்டர் ஸம்னர் வெல்ஸை அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஐரோப்பாவுக்கு அனுப்புகிறர். மிஸ்டர் வெல்ஸ் 17-ந் தேதி முதலில் இத்தாலி செல்வார்.

### ருஷ்யா—பின்லந்துப் போர்

பின்லந்துக் கிழக்குப் போர்முனையில் ரஷ்யர்கள் முறியடிக்கப்பட்டனர். கரிலியன் பூசந்தியில் ரஷ்யர் முயற்சி பலிக்கவில்லை. குஹ்மோ போர்முனையில் சென்ற 11 தினங்களாக இடைவிடாமல் போர் நடந்து வருகிறது. பிப்ரவரி 8-ந்தேதி ஸம்மா போர்முனையில் ரஷ்யர் பெருஞ் சேதத்துடன் முறியடிக்கப்பட்டனர். வழு ரஷ்ய டாங்கிகள் நாசஞ்செய்யப்பட்டன. 700 ருஷ்யர்களுக்கு உயிர்ச்சேதம். ஸம்மா போர்முனையில் ரஷ்யர் தீவிரமாகத் தாக்கி வருவதாகத் தெரிகிறது. எல்லாப் போர் முனைகளிலும் மொத்தம் 1,000 ரஷ்யருக்குச் சேதமேற்பட்டிருக்கலாம். பின்னிஷ் துருப்புகள் உறுதியுடன் எதிர்த்துப் போராடி வருகின்றன. எனினும் அவற்றின் சிரமம் அதிகரித்து வருகிறதாம். ஸம்மாவில் மட்டும் 50,000 சோவியத் துருப்புகள் போரிடுகின்றன. இம்மாதம் அந்நிய தேசங்களிலிருந்து 700 விமானங்கள் பின்லாந்து செல்லும். ஸ்பெயின் 50 லட்சம் குரோனர் பெறுமான யுத்த தளவாடங்களை அனுப்பியுள்ளது.

### மந்திரவாதிக்குக் கடுங்காவல்

திருநெல்வேலியைச் சேர்ந்த அருணசல நாடார் என்ற மந்திரவாதி, பாக்கிய நாடாத்தி என்பவளின் மகளையும் மருமகளையும் சமரசப்படுத்திவைப்பதற்காகப் பூஜை போட ஷ நாடாத்தியின் தங்க நகையை வாங்கியதாயும், பூஜை முடிந்ததும் நகை காணமற் போய்விட்டதாயும் ஷ மந்திரவாதிமீது தொடரப்பட்ட வழக்கில், சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட், எதிரி ஏமாற்றியதாகக்கண்டு மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

### சிவகெங்கையில் ஆண்டு விழா

(நமது நிருபர்)

மகாராஜா உயர்தரக் கலாசாலையின் 84வது ஆண்டு விழா ராமனுதபுரம் ஜில்லா கலக்டர் ஸ்ரீ வெஸ்ட்லேக் ஐ. ஸி. எஸ். தலைமையில் 9-2-40ல் சிறப்பாக நடைபெற்றது. பள்ளிமைதானத்தில் மாணவர்கள் உடற்பயிற்சி, விளையாட்டுப் போட்டிகள் நடந்தன. திவானுள்பட பல முக்கிய உத்யோகஸ்தர்களும் மகாராஜா அவர்கள், குமார ராஜா, இளையராஜாவுடனும் விஜயஞ் செய்திருந்தனர். வெற்றி பெற்ற மாணவர்கட்குத் தலைவர் பரிசுகளை வழங்கினர். கலாசாலை நன்கு நடத்தப்பெற்று வருவதைப் பாராட்டித் தலைவர் தமது முடிவுரையில் பேசினர். மாணவர்களது நடிப்பு, பேச்சு முதலியனவும் நடந்தன.

---

இந்தியா சட்டசபையிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் மார்ச்6-உ சட்டசபைக் கூட்டத்திற்குச் செல்வார்களென்று தெரிகிறது. தங்கள் ஸ்தானங்கள் காலியாகாம லிருப்பதற்காக ஒருநாள் மட்டும் போவதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.



## காங்கிரஸ் மாளிகை நிதி வாரம்

### காரைக்குடியில் கொண்டாட ஏற்பாடு

சென்னைக் காங்கிரஸ் மாளிகை சமீபத்தில் தீக்கிரையானதால் ஏற்பட்டிருக்கும் நஷ்டத்தைப் பரிகரிப்பதற்காகவும், புது மாளிகை நிர்மாணிப்பதற்காகவும், 22-2-40 முதல், 29-2-40 வரை "காங்கிரஸ் மாளிகை நிதி வாரம்" என ஒரு வாரத்தை நடத்த வேண்டு மென்றும், ஷ வாரத்தில் நகரிலுள்ள எல்லாப் பொது ஸ்தாபனங்களும் காங்கிரஸ் காரர்களும், பெரு முயற்சி எடுத்து நிதிவசூல் செய்ய வேண்டுமென்றும் தமிழ் நாட்டுத் தலைவர் கேட்டுக் கொண்டிருக்கிருர். அவ் வேண்டுகோட்படி 18-2-40 ஞாயிற்றுக் கிழமை மாலை 4 மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும். ஷ நிதி வசூலிப்பதற்கான ஏற்பாடுகள் செய்வதுபற்றி ஆலோசிக்கப்படும். நகரிலுள்ள எல்லாப் பொது ஸ்தாபனங்களும், பொது மக்களும் திரளாகக் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது என்று நகரக் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ வி. பரமசிவன் அறிவிக்கிருர்.

### காரைக்குடி மாதர்கள் சங்கம் (Ladies' club)

நமது சங்கத்திற்கு புது இடத் திறப்பு விழா 22—2—40 தேதி வாக்கில் நடைபெறுவதற்கான வேலைகள் தீவிரமாய் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. இடம் நா. புதூர் அ-ராம, வெ. பங்களாவுக்குச் சமீபத்தில் உள்ளது. ரொம்பப் பாதுகாப்பும், சுகாதார வசதியும் அமைதியும் கூடியதாக மிகச் சௌகரியமான நல்ல முறையில் கட்டிடம், திரவுண்டு தயாரிக்கப் பெற்றிருக்கின்றது. பெண்மக்கள் உயர்வுக்கு இச்சங்கம் பெருந் தொண்டு புரிய முன்வந்துள்ளது. ஆகையால் சகோதரிகள் அனைவரும் நமது சங்கத்தில் அங்கத்தினராய்ச் சேர்ந்து மேன்மையடைய வேண்டிக் கொள்கிறோம். பிரவேசக் கட்டணம் ரூபாய் ஒன்று. மாதச் சந்தா அணா எட்டு என்று காரியதரிசி ஸ்ரீமதி அழ. வள்ளியம்மை அறிவிக்கிருர்.

### திரிபுரம் காங்கிரஸில் ரயில்வே வருமானம்

சென்ற தடவை திரிபுரத்தில் நடந்த காங்கிரஸில் ரயில்வே கம்பெனிகளுக்குச் சுமார் 1,75,800 ரூபாய் வருமானம் வந்ததாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

### செட்டியார்மீது ஜீவனும்ச வழக்கு

அலோர்ஸ்டார், பிப், 1—

"சட்ட ரீதியாகக் கல்யாணம் செய்து கொண்டிராவிட்டாலும், வாதியும் பிரதிவாதியுமான இருவரும் கணவனும் மனைவியுமாக வசித்தனர். பிரதிவாதி இந்தியாவுக்குச் செல்லும் சமயத்தில், வாதி கெர்ப்பத்தின் ஆரம்ப சந்தர்ப்பங்களில் இருந்தாள். எனவே இந்த ஜீவனும்ச வழக்கில் சம்பந்தப்பட்ட சிறுவன் பிரதிவாதிக்கு வாதியால் பிறந்த சிறுவன்தான்"—இவ்வாறு கூலிம் டிஸ்டிரிக்ட் ஆபீஸர் எச். எச். துங்கு அப்துல் ரஹ்மான் அவர்கள், தம் முன்னல் நடந்த ஜீவனும்ச வழக்கொன்றில் தீர்ப்பளிக்கையில் குறிப்பிட்டார். தாவணி என்ற ஒரு வாலிபத் தமிழ்ப் பெண் தனது 3 வயதுக் குழந்தை ஒன்றுக்கு ஜீவனும்சம் கோரி, கூலிம் ஒய், எம். எம். பி. எல். முத்துக் கருப்பன் என்ற செட்டியார்மீது வழக்குத் தொடர்ந்திருந்தாள். சாக்ஷியங்களெல்லாம் முடிந்த பின்னர், நீதிபதி, வாதியையும் பிரதிவாதியையும் பிரஸ்தாபக் குழந்தை சஹிதம் தமது சேம்பர் அறைக்குள் வரும்படி அழைத்து, வழக்கை 5 நிமிஷ நேரம் ஒத்திவைத்தார். சேம்பரில்அந்தக்குழந்தையைப் பரிசோதனை செய்ததின் பின்னர், நீதிபதி அவர்கள், பிரஸ்தாபக் குழந்தையின் ஜீவனும்சத்துக்காக மாதம் 10 வெள்ளி வீதம் கொடுக்கும்படி செட்டியாருக்கு உத்தரவிட்டார்.

---

சர்க்கார் நிர்ணயித்த விலைகளுக்கும் அதிகமாக விலை வைத்து அந்நிய மருந்துகளை விற்றதற்காக கல்கத்தாவிலுள்ள 16 கம்பெனிகள் மீது சர்க்கார் வழக்குத் தொடர்ந்திருக்கிருர்கள்.

## ராஜாங்க சபைத் தேர்தல்

### ஸ்ரீ ரங்கசாமி ஐயங்காருக்குப் போட்டியில்லை

ராமனுதபுரம் ஜில்லாப் பொதுத் தொகுதிக்கு, சென்னை ராஜாங்க சபைத் தேர்தலில், காங்கிரஸ் சார்பாக இப்பொழுது அங்கத்தினராக இருக்கும் ஸ்ரீ வ. ரங்கசாமி ஐயங்கார் மட்டுமே அபேட்சைப் பத்திரம் தாக்கல் செய்திருக்கிருர். இவர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படும்.

### காங்கிரஸ் காரியக் கமிட்டி 28-ந்தேதி கூடும்

அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி பாட்னவில் பிப்ரவரி 28-ந்தேதி கூடும். தற்கால அரசியல் நிலைகுறித்துப் பரிசீலனை செய்யப்படும். மகாத்மாவும் விஜயஞ் செய்யக்கூடும்.

### வர்ன ஓட்டுப் பெட்டிகள்

வரப்போகும் ராஜாங்க சபைத்தேர்தலில் எந்தெந்த அபேட்சகர்களுக்கு எந்தெந்த வர்ணப் பெட்டிகளை அளிக்க வேண்டு மென்பது பற்றிய விஷயத்தை நிர்ணயிக்கும் உரிமையை தேர்தல் அதிகாரிகளுக்கே (ரிட்டர்னிங் ஆபீசர்கள்) அளித்திருப்பதாகச் சென்னை சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர். ஆனல் முடிந்த வரையில் அபேட்சகர்களது இஷ்டத்தையும் கவனிக்குமாறு தேர்தல் அதிகாரிகளுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது.

### மகிபாலன்பட்டி ரோடு

ராமனுதபுரம் ஜில்லா போர்டு அதிகாரத்தின் கீழ் கண்டவராயன்பட்டியிலிருந்து மகிபாலன்பட்டி வரும் ரோடு இரண்டு வருஷங்களுக்கு முன் சேர்க்கப் பெற்றது. அந்த ரோடு இப்பொழுது முன்னிருந்ததைக் காட்டிலும் அதிகப் போக்குவரத்துக்கு சாதனமாக இருக்கிறது. செய்குப்பை போகும் பிரயாணிகளும் இவ்வழியை மிகவும் உபயோகிக்கின்றனர். இந்த ரோடு இன்று சீர்கேடான நிலையிலிருக்கிறது. சமீபத்தில் மழை பெய்தால் மனிதர் நடமாட்டத்திற்குக் கூட கஷ்டமாக இருக்கும். கிராமத்து மக்கள் மிகவும் கஷ்டப்படுவதால் ஜில்லா போர்டு அதிகாரிகள் கவனம் எடுத்து ரோட்டை விரைவில் சீர்திருத்துவது அவசிய மென்று ஸ்ரீ அள. சேது அம்பலம் எழுதுகிறர்.

### ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமி மக விழா

ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமிகள் வெள்ளி ரதத்திலும் மா ரதத்திலும் 19-2-40 திங்கட்கிழமை காலை 9 மணிக்கு சென்னை பவளக்காரத் தெரு நகரத்தார் மடத்திலிருந்து புறப்பட்டு திருவொற்றியூருக்குப் போய்ச் சேர்ந்து மறுபடியும் 23-2-40 வெள்ளிக்கிழமை பகல் 2 மணிக்கு திருவொற்றியூரிலிருந்து புறப்பட்டு பவளக்காரத் தெருவுக்கு வந்து சேருவார். செவ்வாய், புதன் கிழமைகளில் ஒற்றியூரில் மகேஸ்வர பூசையும், வியாழன், வெள்ளிக் கிழமைகளில் மகிழடி மகேஸ்வர பூசையும் நடைபெறும். இந்த ஐந்து தினங்களிலும் மதராஸிலுள்ள நகரத்தார் கடைகளில் கொடுக்கல் வாங்கல் முதலிய வேலைகளை நிறுத்தி வைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

### அரிமளத்தில் ஆண்டு விழா

தனவைசிய இளைஞர் சங்கத்தின் 2-வது ஆண்டு நிறைவு விழா மாசி 4-ம் தேதி வெள்ளியன்று மாலை சங்க வாசகசாலைக் கட்டிடத்தில் நிரந்தரத் தலைவர் திரு. மு. பெரியகருப்பன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெறும்.

### கல்கத்தாவில் வட்டமேஜை மகாநாடு

ஹிந்து முஸ்லிம் தலைவர்களின் வட்ட மேஜை மகாநாடொன்று கல்கத்தாவில், சர்க்கார் மாளிகையில் பிப்ரவரி 24உ நடக்கும் என்று தெரிகிறது.

## கால் நடை ஜீவகாருண்ய வாரம்

காரைக்குடி ஜீவஹிம்சை நிவாரண சங்கத்தின் சார்பில் பிப்ரவரி 5உ ஆரம்பமான கால் நடை ஜீவகாருண்ய வாரம் 10உ முடிந்தது. 7உ காலை செக்குகளையும் பண்ணைகளையும் சங்கத்தார் பார்வையிட்டனர். துன்பத்தால் அவதிப்பட்ட மாடுகள் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டன. அன்று மாலை சழனிவாசலில் ஸ்ரீ அள கரு.அடைக்கப்ப செட்டியார் தலைமையில் சங்கத்தின் கடமைகளைப் பற்றி ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் உபந்யாசம் செய்தார். மிருக ஆஸ்பத்திரி டாக்டர் மாஜிக்லாண்டர் காண்பித்தார். 8 உ காலை குதிரை வண்டி நிலயங்களைப் பார்வையிட்டு புண்ணுள்ள குதிரைகளை வண்டியில் பூட்டாதிருக்கும்படி சொன்னர்கள்.மாலை செக்காலை சரோஜினி வாசகசாலையில் ஓர் பொதுக்கூட்டம் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. 9உமாலை கல்லுக்கட்டியில் ஸ்ரீசா. கணேசன் தலைமையில் கால் நடைகளிடத்து நமது கடமை என்பதுபற்றி டாக்டர் பீம் சிங் பேசினர். 10உ பிற்பகல் செக்காலை சுகாதார நிலயத்தில் ஸ்ரீ SM. AR. நாராயணன் செட்டியார் தலைமையில் கால் நடைக் காட்சி நடைபெற்றது. ஸ்ரீ டி. புருஷோத்தப் பரிசுகள் வழங்கினர். குதிரை, பசு, கன்று, காளை, நாய் முதலியவற்றிற்குப் பலவிதப் பரிசுகள் வழங்கப்பட்டன. சங்கக் காரியதரிசி டாக்டர் S. S. சாரி சங்க ஊழியத்தை விவரித்து சங்கத்திற்கு ஸ்ரீ அள. கரு. அடைக்கப்ப செட்டியார் ரூ. 500 நன்கொடையளித்திருப்பதாயும், ஸ்ரீமான்கள் M. S. M. M. மெய்யப்ப செட்டியார், M. RM. பெரியணன் செட்டியார், S. M. AR. நாராயணன் செட்டியார், AR. A. RM. சொக்கலிங்கம் செட்டியார் முதலியோரும் நன்கொடையளித்திருப்பதாயும் அவர்கட்கு நன்றி செலுத்துவதாயும் குறிப்பிட்டார். இத்துடன் விழா முடிவுற்றது.

### ஹிந்தி வகுப்புகள் ஆரம்பம்

காரைக்குடி ஹிந்திப்பிரசாரகர் ஸ்ரீ டி. வி. இராமசாமி ராஜு அடியில் வருமாறு அறிவிக்கிருர்:-சென்ற 12-2-40 திங்கட்கிழமை காரைக்குடி எஸ் எம்.எஸ். வித்தியாசாலையில் தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையாரால் நடத்தப்பெற்ற ஹிந்திப் பரிக்ஷையில் ஹரிஜனச்சிறுவர்உட்பட 25பேர் கலந்து கொண்டனர்: பிராத்மிக் பரீட்சையில் 21 பேர், மத்திமா பரீட்சையில் 3 பேர், ராஷ்டிரபாஷா பரீட்சையில் ஒருவர். காரைக்குடியில் கீழ்க்கண்ட இடங்களில் புது வகுப்புகள் நடைபெறும்: இராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கக் கட்டிடத்தில் தினசரி காலை 11 மணி முதல் 12 மணி வரை ஆரம்ப வகுப்பு நடைபெற்று வருகிறது. 17-2-40 முதல் 5 மணி முதல் 6 மணி வரை "மத்தியமா" வகுப்பு நடைபெறும். கட்டணம் ரூபாய் ஒன்று. ஷ சங்கக் கட்டிடத்தில் செவ்வாய், வியாழன், சனிக்கிழமைகளில் மாலை 7 மணி முதல்-9 மணி வரை "மத்தியமா" வகுப்பும் கட்டணமின்றி தொழிலாளருக்காக நடைபெறும். 17-2-40 சனி முதல் காங்கிரஸ் மாளிகையில் திங்கள், புதன், வெள்ளி இம்மூன்று நாட்களில் இரவு 7 மணி முதல் 8-30 வரை ஆரம்ப வகுப்பும், "ராஷ்ட்ரபாஷா" வகுப்பும் நடைபெறும். 20-2-40 முதல் ஜவகர் வாசகசாலைக் கட்டிடத்தில் ஆரம்ப வகுப்பு மாலை 5-30 முதல் 7-30 வரை நடைபெறும். கட்டணம் ரூபாய் ஒன்று.

### காரைக்குடி அச்சுத் தொழிலாளர் சங்கம்

9-2-40ல் சங்கத் தலைவர் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார் தலைமையில் "ஊழியன்" ஆபீஸ் கட்டிடத்தில், சங்கத்தின் சதாரண மகாசபைக் கூட்டம் மாலை 7மணிக்கு ஆரம்பிக்கப்பெற்றது. தலைவர், தொழிலாளர்கள் ஒற்றுமையாயிருக்கவேண்டியதன் அவசியத்தைப் பற்றி, விரிவாக எத்துரைத்தார். ஸ்ரீ வி. வி. ஜோகய்ய பந்துலுகாரு யாரடைப்பால் திடீரென மரணமடைந்தது குறித்து இச்சங்கம் வருந்துவதாயும், அன்னர் குமாரர் ஸ்ரீ வி. வி கிரிக்கு அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறதென்றும் ஏகமனதாக தீர்மானிக்கப்பெற்றது.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரெங்கூன், பிப். 14உ.

| | |
|---|---|
| கலேன், பெரிய மில், சிறிய மில் செல் | 105/106 |
| ஷ இன்வின் | 106-8/107-8 |
| ஷ நடுத்தரம் | 114/115 |
| சுகந்தி வெள்ளை அரிசி | 300/310 |
| லொங்ன் லெயின் | 250/255 |
| மில்சார் ஹென்டா & புரோக்கன் | 280/282-8 |

### லண்டன் ரப்பர்

லண்டன், பிப். 12உ.

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு பன்னிரண்டே முக்கால் வீசம் பென்ஸ்

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, பிப். 10உ.

| | |
|---|---|
| ஒரேப் ரப்பர் | 56½ சதம் |
| ஷீட் ,, | 56½ ,, |
| டீ கரப்பன் | 33½ ,, |
| ரப்பர் கரப்பன் | 25 ,, |

### கொப்பரா

| | |
|---|---|
| முதல்தரம் | ரூ. 48.75 |

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், பிப். 10உ.

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 51 வெள்ளி 83 காசு

### சென்னை மார்க்கெட்

சென்னை, பிப். 13உ.

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 27 | 4 | 3 |
| சவரன் (சில்லரையில்) | 27 | 4 | 6 |
| மூசை தோலா 1க்கு | 41 | 11 | 9 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 57 | 4 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 9 | 3 |

### சிவகெங்கைத் தாலூகா காங்கிரஸ் கமிட்டி

ஒவ்வொரு கிராமக் காங்கிரஸ் சபையும் பழைய சபையைக் கலைத்துவிட்டு புது சபையை 15-2-40 முதல் 28-2-40 க்குள் அமைத்து, சபையின் தேர்தல் முடிவுகளை தமக்கு அனுப்பி வைக்கும்படி ஷ கமிட்டி காரியதரிசி ஸ்ரீ கா. கண. வே. வேலாயுதம் செட்டியார் அறிவிக்கிருர்.

### ஜில்லா போர்டு ஆஸ்பத்திரி திறப்பு விழா

(ஒரு நிருபர்)

வா. புதூரில் (உலகம்பட்டி) ஸ்ரீ அள. அ. அண்ணாமலைக்கோனர், ஸ்ரீ அ. சொ. அ. வெள்ளைச்சாமிக் கோனர் அவர்கள் நன்கொடையால் கட்டப்பெற்ற ஜில்லா போர்டு ஸ்ரீ பத்தினி நிலைய ஆஸ்பத்திரி, ஜில்லாபோர்டுத் தலைவர் ஸ்ரீ பி. எஸ். குமாரஸ்வாமி ராஜா M. L. A. அவர்களால் பிப்ரவரி 10உ திறந்துவைக்கப்பெற்றது. உலகம்பட்டி சே. உ. கலாசாலை மாணவர்கள் தேசிய கீதம் பாட ஸ்ரீ V. S. RM. வள்ளியப்பா M. L. A. அவர்கள் தேசியக் கொடியை ஏற்றிவைத்தார்கள். வடக்கு இராமநாதபுரம் ஜில்லா போர்டு மாஜித் தலைவர் ஸ்ரீ C. V. C. T. V. வெங்கடாஜலம் செட்டியார் அவர்களும் ஸ்ரீ கரு. முத்து சிவலிங்கம் அவர்களும் ஆஸ்பத்திரியின் அபிவிருத்தியைப் பற்றிப் பேசினர்கள். பிறகு ஜில்லா போர்டு டாக்டர் B. S. ஸ்ரீனிவாசன் அவர்களால் வந்தனோபசாரம் கூறப்பெற்று, கூட்டம் இனிது முடிந்தது. திறப்பு விழாவின் போது சுமார் 2000 ஏழை மக்களுக்கு அன்னமளிக்கப்பட்டது.

---

ஜப்பானிய சாம்ராஜ்யத்தின் 2600-வது ஆண்டு விழா பிப்ரவரி 11உ ஜப்பானில் மிக ஆடம்பரமாகக்கொண்டாடப்பட்டது.

## வாலாஜாபாத் இந்துமத பாடசாலை

### தேவகோட்டை ஜமீன்தார் விஜயம்

தேவகோட்டை ஜமீன்தார் ஸ்ரீமான் AL. RM. சோமநாதன் செட்டியார் அவர்கள் தம் உறவினருடன் ஜனவரி 31உ ஷை பாடசாலைக்கு விஜயஞ்செய்து வகுப்புகளையும், நூல் நிலையத்தையும், மாணவர் இல்லத்தையும் மாணவர் விளையாட்டுகளையும் உடற்பயிற்சி முறைகளையும், தொழிற்சாலையையும் கண்டு களித்தனர். பின் ஜமீன்தார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற மாணவர் கூட்டத்தில் பேசும்போது, பிற இடங்களிலில்லாத சிறந்த முறையில் இப் பாடசாலையும் மாணவர் இல்லமும் நடைபெற்று வருவதாகக் குறிப்பிட்டு பாடசாலையின் வளர்ச்சிக்காக வாழ்த்தினார்கள்.

### இரு பெரியார்கள் பாராட்டு

காரைக்குடி முனிஸிபல் கௌன்ஸிலர் ஸ்ரீமான் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களும் ஷையூர் பஞ்சாயத்துக்கோர்ட் பிரஸிடெண்டு ஸ்ரீமான் பனை. மெ. மெ. பழ. வெங்கிடாசலம் செட்டியாரவர்களும் 2-2-40ல் வாலாஜாபாத்திற்கு விஜயம்செய்து இந்துமத பாடசாலையின் வகுப்புகளையும் நூல் நிலையம் தொழில் நிலையம் கைத்தொழில் நிலையங்கள் முதலியவைகளையும் வள்ளலார் மாணவர் இல்லத்தையும் பார்வையிட்டனர். ஸ்ரீமான் சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்ற மாணவர் கூட்டத்தில் இரு பெரியார்களும் சிறுவர்களின் உத்ஸாகத்தையும் படிப்புத் திறமையையும் தொழில்களில் பழக்கம் பெற்றிருப்பதையும் ஆசிரியர்களின் அன்பையும், பாடசாலையும் மாணவர் இல்லமும். நடத்தப்படும் சிறந்த முறையையும் வியந்து பேசினார்கள்.

---

முதன் முதல் தயாரிக்கப்பட்ட டைப் அடிக்கும் யந்திரத்தை 1714ல் ஹென்ரி மில் என்பவர்தான் செய்தார். ஆனால் அவர் எப்படி அதைத் தயாரித்தார் என்பதுபற்றிய விவரம் கிடைக்கவில்லை.

## சட்ட சபை அங்கத்தினர்களுக்குள்ள யோக்கியதை என்ன?

### டில்லி அஸம்பிளியில் ருசிகரமான விவாதம்

பிப்ரவரி 7-ந்தேதி நடைபெற்ற இந்திய அஸம்பிளிக் கூட்டத்தில், பத்திரிகை ஆசிரியர்களுக்கும், அச்சுக்கூடம் வைத்திருப்போர்களுக்கும், குறைந்த பட்ச யோக்கியதையைக் குறிப்பிட்டு வற்புறுத்தும் நோக்கத்துடன் ஸ்ரீ லால் சந்த் நாவல் ராய் ஒரு மசோதா கொண்டு வந்தார். இது பற்றி நீண்ட விவாதம் நடைபெற்று முடிவில் ஓட்டுக்கு விடப்பட்டபோது ஆதரித்து ஸ்ரீ நாவல் ராயும், பாய் பரமானந்தருமே சாதகமாக வாக்களித்தனர். சர்க்கார் நடுநிலைமை வகித்தனர். மசோதா தள்ளுபடியாயிற்று. அச்சுச் சட்டத்தையும் புத்தகப் பதிவுச் சட்டத்தையும் திருத்துவதே இந்த மசோதாவின் நோக்கம். ஒரு பத்திரிகையை அச்சிடுபவரும் நடத்துபவரும் குறைந்தபட்சம் மெட்ரிகுலேஷன் பரீட்சையாவது தேறியிருக்க வேண்டுமென்றும், அவர்கள் ஒழுக்கக்கேடான காரியத்துக்காகத் தண்டிக்கப்படாதவராக இருக்க வேண்டுமென்றும் மசோதா நிர்ணயிக்கிறது. சபையில் இது பற்றி நடந்த ருசிகரமான விவாதத்தின் சுருக்கம் வருமாறு:—

ஸ்ரீ ஜோஷி: பத்திரிகாசிரியர்களாகவும், அச்சுக்கூடச் சொந்தக்காரர்களாகவும், வருவோருக்கு நிபந்தனை விதிக்கு முன்பு, சட்டசபை மெம்பர்களுக்குக் குறைந்த பட்ச யோக்கியதையை நாம் நிர்ணயிக்க வேண்டாமா? உதாரணமாக இந்த அசம்பிளியிலுள்ள மெம்பர்களில் எத்தனை பேர் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறியுள்ளவர்கள்? ஒழுக்கக்கேடான காரியங்களில் சம்பந்தப்படாதவர்கள் எத்தனை பேரிருப்பார்கள்? (சிரிப்பு). ஒழுக்கக் கேடான காரியம் செய்ததற்காக ஒருவர் தண்டிக்கப்பட்டிருக்கலாம்; அவர் இந்தியா சட்ட சபை அங்கத்தினராகவும் வந்துவிடலாம்; மெட்ரிகுலேஷன் பரிட்சையிலும் தேறியிருக்கலாம். ஆனால், அவர் என் நண்பர் கருத்துப்படி ஆசிரியராக மட்டும் இருக்கக் கூடாதா?

ஸர் ஸியாவுத்தீன் அகமத்:—ஸ்ரீ நாவல் ராய் மெட்ரிகுலேஷன் பரீட்சைக்கு அதிக மதிப்புக் கொடுத்திருக்கிறார். கல்கத்தா சர்வகலாசாலைக் கமிஷன் முன்பு ஐரோப்பிய வர்த்தகசபைப் பிரதிநிதிகள் சாட்சியங் கூறியபோது மெட்ரிகுலேஷன் தேறியவர்களைவிடத் தேறாதவர்களே உத்யோகத்துக்கு ஏற்றவர்கள் என்று சொன்னார்கள்; ஏனெனில் பரீட்சைகளில் தேறாதவர்களுக்கே பொது அறிவு அதிகமாக இருக்கிறதாம். பரீட்சையில் தேறுவது அதிர்ஷ்டத்தைப் பொறுத்தேயிருக்கிறது.

ஸ்ரீ ஸர் கஸ்னவி:—ஸ்ரீ நாவல் ராய் சொல்லுவது ஹிட்லர்முறையை ஒத்ததாக இருக்கிறது.

ஸர் மாக்ஸ் வெல்.—சர்க்கார் இவ் விஷயத்தில் நடுநிலைமை வகிக்கிறார்கள். பொது ஜனங்கட்கு இம்மசோதாவால் என்ன பாதுகாப்பு ஏற்படும் என்று தெரியவில்லை. ஒழுக்கக்கேடான காரியத்திற்காகத் தண்டிக்கப்படாதவர்கள், வகுப்புத் துவேஷப் பிரசாரம் செய்து பொது ஜனங்களைத் தவறான வழிக்கு இழுத்துச் செல்லமாட்டார்கள் என்பதற்கு நிச்சயமென்ன? மெட்ரிக்குலேஷன் பரீட்சையில் தேறாதவர்கள் தான் தவறு செய்கிறார்களா? 'ஒழுக்கக் கேடு' என்பதும், பத்திரிகாசிரியர் என்பதும் விவரிக்கப்படவில்லை. நிஜமான ஆசிரியர்களும் 'ஊமை'யான ஆசிரியர்களும் இருக்கிறார்களல்லவா? இந்த மசோதாவை நிறைவேற்றிய பிறகு, மெட்ரிக்குலேஷன் பரீட்சை தேறியிருக்காத ஆசிரியர்களையெல்லாம் விலக்கி விடுவதா?

## நோட்டீஸ்

### தேவகோட்டை சப் கோர்ட்டு

E. P. No. 337 of 37

O. S. No. 14 of 39.

திருவாங்கூர் நாஷனல் அண்டு கொய்லோன் பாங்கு (காரைக்குடி பிராஞ்சு) அதின் அபிஷியல்லிக் விடேட்டர்கள் மூலம் — வாதி

காரைக்குடியிலிருக்கும் S. N. அழகப்ப செட்டியார் 1-வது — பிரதிவாதி

ஷை 1-வது பிரதிவாதிக்கு அறிவிப்பதாவது:—

வாதி உம்வகையார் பேரில் பெற்றிருக்கிற டிக்கிரிக் கடனை வசூலிப்பதற்காக உமக்குப் பாத்தியமான சொத்துக்களை ஏலத்துக்குக் கொண்டுவந்து ஏல இஸ்தியார் ஷரத்துக்களை நிர்ணயிப்பதற்காக 20-2-40ல் வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷைவாயிதா தேதியில் பகல் 10-மணிக்கு ஷை கோர்ட்டில் நீர் நேரிலாவது ஓர் வக்கீல் மூலமாவது ஆஜராகி உமக்குள்ள ஆக்ஷேபனையைத் தெரிவித்துக்கொள்ளாவிட்டால் ஷை மனு ஒருதலைப் பக்ஷமாய் முடிவு செய்யப்படும்.

S. லெக்ஷ்மிரதன் பாரதி, வாதி வக்கீல்.

தேவகோட்டை, 7—2—40.





அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் 53-வது மகாநாடு இவ் வருடம் மார்ச் 19, 20, 21-தேதிகளில் பீஹார் மாகாணத்தில், தாமோதர நதிக் கரையிலுள்ள ராம்காரில் நடைபெறப் போகிறது. இது ஒரு பெரிய கிராமம். காங்கிரஸ் மகாநாட்டின் போது இது ஒரு பெரிய நகரமாக விளங்கும். பதினைந்து முதல் இருபதாயிரம் பேர் வரக்கூடும். இந்த இடம் முன் ஒரு காலத்தில் ஒரு ராஜதானியாக விளங்கியதாகச் சரித்திரம் கூறுகிறது. சுமார் ஆயிரம் ஆண்டுகள் இந்த மன்னர்கள் ஆண்டபின், பிரிட்டிஷ் ஆட்சியால் மங்கி மறைந்துபோயினர். இது சோட்டா நாக்பூரைச் சேர்ந்தது; பீஹாரிலேயே மிகப் பிற்போக்கான பகுதி; ஆனால் மாகாணத்தின் நடு மத்தியில் இருக்கின்றது.

இதன் இருமருங்குகளில் ரயில் பாதை செல்கின்றது. பி. யன். ரயில் பாதையைச் சேர்ந்த ராம்கார் டவுன் என்ற ஸ்டேஷன் ஒரு பக்கமும், ராஞ்சி ரோடு என்ற இ. ஐ. ரயில் பாதையைச் சேர்ந்த ஸ்டேஷன் மறு பக்கமும் இருக்கின்றன. ராம்கார் டவுன் ஸ்டேஷனில் புதிய பிளாட்பாரங்கள் அமைக்கப்படுகின்றன. பிப்ரவரி 15உ முதல் மார்ச் 31உ வரை குறைந்த கட்டண டிக்கட்டுகள் வழங்கப்படும். இங்கு எளிதாகத் தண்ணீர் வசதி செய்துகொள்ளமுடியும் என்பது, இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்ததற்கு முக்கிய காரணமாகும். தாமோதர நதி ஒரு பக்கம் ஓடுகின்றது. சுமார் 250 ஏக்கர் விஸ்தீரணமுள்ள இடத்தில் நகர் அமைக்கப்படுகிறது.

சென்ற மே மாதத்திலேயே இந்த இடம் தேர்ந்தெடுக்கப்பட்டு எல்லா ஏற்பாடுகளும் துரிதமாக ஆரம்பிக்கப்பட்டன. வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டு ஒரு நிர்வாகக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது. காங்கிரஸ் நகர் நிர்மாண வேலை ஸ்ரீ அம்பிகா காந்த சின்ஹா வசம் ஒப்படைக்கப்பட்டது. ஆனால் சென்ற அக்டோபரில், இவ்வருஷம் காங்கிரஸ் கூடுமா என்ற சந்தேகம் தோன்றிற்று. இதனால், வேலைகள் அநேகமாக நின்றுவிட்டன. டிசம்பரில்தான் இதில் நிச்சயம் ஏற்பட்டது. காங்கிரஸ் கூடுமென்ற முடிவுடன் வேலைகள் மீண்டும் தொடங்கப்பட்டன.

காங்கிரஸ் நகர நிர்மாண வேலைகளெல்லாம் துரிதமாக நடைபெற்று வருகின்றன. ஊழியர்களுக்கு வேண்டிய குடிசைகள் பூர்த்தியாகிவிட்டன. வரவேற்புக் கமிட்டிக் காரியாலயமும் அப்படியே. மாகாணம் முழுவதும் 3000 ஆண் தொண்டர்களும், 200 பெண் தொண்டர்களும்

## ராம்காரில் காங்கிரஸ் நகர் அமைப்பு

### காங்கிரஸ் நிதிக்குக் கரன்ஸி நோட்டு மாலை

#### பொருட்காட்சியை மகாத்மா திறந்துவைப்பார்

தயாரிக்கப்பட்டு வருகின்றனர். ஆண் தொண்டர் படையை ஸ்ரீ ஷாம் பிரசாதும், பெண் தொண்டர் படையை மிஸ் பிரேம் கந்தாக்கும் தலைமைவகித்துப் பயிற்றுவித்து வருகின்றனர். பெண் தொண்டர்களுக்கான பயிற்சி முகாம் ராம்காரில் பிப்ரவரி 15உ திறக்கப்படும். டிரில், நூற்றல், தேசிய கீதம் முதலியன அவர்கட்குக் கற்றுக்கொடுக்கப்படும். தலைவர்கள் முகாம், காங்கிரஸ் கமிட்டிப் பந்தல், மகாசபை, கண்காட்சி, ஆஸ்பத்திரி இவற்றில் சேவை செய்வார்கள். கடிதங்களைச் சேர்ப்பித்தல், வழிகாட்டுதல், பெண்கட்கும் குழந்தைகட்கும் சேவை புரிதல். முதலிய வேலைகளையும் செய்வார்கள்.

காங்கிரஸ் நகர நிர்மாணத்துக்கு மட்டும் இரண்டு லட்சம் ரூபாய் செலவாகுமென்று ஸ்ரீ சின்ஹா அபிப்பிராயப்படுகிறார். நகரில் இப்பொழுது தினமும் 1100 ஊழியர்கள் வேலை செய்துவருகின்றனர். ஆண்களுக்கு 4 அணா வீதமும், பெண்களுக்கு $2\frac{1}{2}$ அணா வீதமும் தினசரிச் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. அந்தப் பாகத்தில் தொழிலாளர்க்குக் கிடைக்கும் சராசரிச் சம்பள விகிதத்தைவிட இது உயர்ந்த விகிதம் என்று தெரிகிறது. இந்த வருஷக் காங்கிரஸ் நகரிலே ஒரு அதிசயம். நகரினுள்ளே புஷ்பச் செடிகளை நட்டு வளர்த்து வருகிறார்கள். காங்கிரஸ் கூடும் சமயம் அத்தனை செடிகளும் கொத்துக் கொத்தாகப் புஷ்பங்களைத் தாங்கி அழகு செய்யும். மணிக் கொடியைச் சுற்றி ஒரு சிறு பூந்தோட்டம்; விஷயாலோசனைக் கமிட்டிப் பந்தல் வாயிலில் இருமருங்கும் புஷ்பச் செடிகள். இது வரை எந்தக் காங்கிரஸ் நகரிலும் இக் காட்சி இருந்ததில்லை.

வழக்கம்போல காங்கிரஸ் மகாநாட்டுடன் அகில இந்திய சுதேசிப் பொருட்காட்சியும் நிர்மாணிக்கப்படும். ஸ்ரீ லட்சுமி நாராயணர் இந்த வேலையைக் கவனித்து வருகிறார். இந்த வருடப் பொருட்காட்சியில் ஒரு புதுமை சென்ற 5,000 வருடத்திய பீஹாரின் சரித்திரத்தை விளக்கும் 25 சித்திரங்கள் வைக்கப்படுவதுதான். காட்சிக் கென்று இவை ஸ்ரீ தினேஷ் பக்ஷியின் தலைமையில் பல வாலிபக் கலா நிபுணர்களால் தயாரிக்கப்படுகின்றன. பல சரித்திராசிரியர்கள் இத்தொண்டுக்கு உதவியும், ஆலோசனையும் அளித்துள்ளார்கள். புத்தருக்கு முற்பட்ட காலத்திலிருந்து இச்சரித்திர விளக்கம் ஆரம்பித்து பிரிட்டிஷ் காலம் வரை வருகிறது. பொருட்காட்சிக்கு வெளியே ஒரு சுதேசி பஜாரும் அமைக்கப்படும் பல மாகாணக் கைத்தொழில் சம்பந்தமான வியாபாரத்துக்கும், விளம்பரத்துக்கும் இங்கு ஏற்பாடு செய்யப்படும். பீஹார் சர்க்கார் ஒரு விவசாயக் காட்சியை நடத்துவார்கள். சோயா அவரை பயிரிடுதல், அதிலிருந்து பலவகைப் பண்டங்கள் தயாரித்தல் முதலியன விளக்கப்படும். மது விலக்குப் பிரசாரம் செய்யவும் பீஹார் சர்க்கார் ஏற்பாடு செய்துள்ளார்கள். பனை, தென்னைப் பதனியிலிருந்து வெல்லம் தயாரிக்கும் முறையும் விளக்கப்படும்.

மார்ச் 10-ந்தேதி அகில இந்திய கதர் கிராமக் கைத்தொழில் பொருட்காட்சியை மகாத்மா காந்தி திறந்துவைப்பார். யந்திரத்தால் செய்யப்பட்ட எதுவும் இக் காட்சியில் அனுமதிக்கப்பட மாட்டாது.

இதுவரை வரவேற்புக் கமிட்டிக்கு ஒரு லட்ச ரூபாய் வசூலாயிருக்கிறது. வரவேற்புக் கமிட்டி உத்யோகஸ்தர்கள் தேர்தல் பிப்ரவரி 17-ந்தேதி நடைபெறும்.

5முதல் 100ரூபாய் வரையுள்ள கரன்ஸி நோட்டுகளை மலர்களினூடே தொடுத்து அழகிய மாலையாகச் செய்து ஸரான் ஜில்லா வாசிகள் காங்கிரஸ் நிதிக்காக, பீஹார் மாகாண மாஜி நிதி மந்திரியும் வரவேற்புக் கமிட்டிக்கு நிதி வசூல் செய்பவருமான ஸ்ரீ அனுக்கிரக நாராயண சின்ஹாவிடம் சமர்ப்பித்திருக்கிறார்கள்.

விசிட்டர்களின் நலத்தை உத்தேசித்து பன்னிரண்டு சமையற்கூடங்கள் கட்டப்படுகின்றன. ஒரே சமயத்தில் 250 பேர் சாப்பிடலாம். இத்துடன் தற்காலிகமாக நகரின் சமீபம் ஹோட்டல்கள் வைக்கவும் அனுமதியளிக்கப்பட்டிருக்கிறது.

---

### சீனு செல்ல மகாத்மாவுக்கு அழைப்பு

சீனாவுக்கு வரும்படி மகாத்மா காந்தியை சியாங்கே ஷேக் அழைத்திருந்ததற்கு, மகாத்மா அளித்துள்ள பதிலில், பல நாளாகச் சீனு செல்லத் தாம் விரும்பிய போதிலும், தற்சமயம் அழைப்புக்கு இணங்க முடியாத நிலையிலிருப்பதாகத் தெரிவித்திருக்கிறார்.

---

சென்னை காங்கிரஸ் மாளிகை நிதிக்கு 500 ரூ. கொடுக்க தஞ்சை ஜில்லா போர்டு தீர்மானித்திருக்கிறது.

## ஜோஸ்யர் தோற்கடிக்கப்பட்டார்

ஸ்ரீ யஸ். பாலசுப்ரமண்யம் 'மெயில்' பத்திரிகையில் வரைந்திருக்கும் ஒரு திருமணத்தைப்பற்றிய ருசிகரமான வரலாறு கீழே மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது:-

ஆறுவருஷங்கட்கு முன், சென்னை மாகாணத்தில் ஓரிடத்தில் நடைபெற்ற ஒரு விசேஷ மணவைபவத்திற்கு நானும் சென்றிருந்தேன். மணமகன் எனக்கு நெருங்கிய நண்பன். நீண்டதூரம் சந்தோஷமாக ரயில் பிரயாணம் செய்து நாங்கள் மணமகன் ஊர்போய்ச் சேர்ந்தோம். வழி நெடுக மாப்பிள்ளையைக் கேலி செய்துகொண்டே போனோம். அவனுடைய பந்து ஒருவர், வயதானவர்; புது மாப்பிள்ளை எப்படித் தன் மனைவியிடம் முதல் முதல் பேச ஆரம்பிப்பார்; அதற்கு என்னென்ன தந்திரங்களை யெல்லாம் கையாளுவார் என்பதை நடித்துக் காட்டிச் சிரிப்பு மூட்டிக்கொண்டே வந்தார். அவர் தம்முடைய முதல் சந்திப்பையும் விளக்கி வேடிக்கையாகச் சொன்னார். முதன் முதல் அவர் தமது மனைவியிடம் பேச முயன்ற போது, அவள் சமையற் கட்டுக்குள் நுழைந்து தாளிட்டுக்கொண்டாளாம். பல தந்திரங்களைப் பிரயோகித்தார். கடைசியில் 'ஐயோ பாம்பு!பாம்பு!' என்று கத்தினாராம். அதற்கும், அந்தப் பெண் திறக்கவில்லையாம். ஆனால், அவள் மட்டும் கதவிலுள்ள சாவித்துவாரத்தினூடே மாப்பிள்ளை யென்ன செய்கிறார் என்று இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டே யிருந்தாளாம்!

பெண் வீட்டிலே எங்களுக்கு ராஜோபசாரம் நடந்தது. அன்றிரவு பெரிய அமர்க்களம். காப்பி தண்ணீர்பட்ட பாடுதான். பல நண்பர்கள் தங்கள் திறமையைச் சீட்டாட்டத்தில் ருசுப்பித்துக் கொண்டிருந்தனர். பக்கத்திலே காது செவிடுபடும்படி மேளம்.

நடு ராத்திரியிலே எல்லாம் திடீரென்று ஸ்தம்பித்து நின்றது. மண வைபவம் நடக்க இன்னும் சில மணி நேரந்தான் இருந்தது. கல்யாணம் நடக்கப் போவதில்லை யென்ற செய்தி கேட்டு அப்படியே திகைத்து விட்டோம். யாரோ ஒரு பெரிய ஜோஸ்யப் புலி அப்பொழுது தான் இருவருடைய ஜாதகங்களையும் பார்த்துவிட்டு, இந்த சம்பந்தம் நடந்தால், பெண்ணின் தாயார் ஆறுமாத காலத்தில் பரலோக பிராப்தி யடைவாள் என்று சொல்லி விட்டாராம்! கேது நாலாமடத்தை விட்டு எட்டிப் பார்க்கிறான்; சனி கோபப் பார்வையிலிருக்கிறான் என்றார் ஜோஸ்யர். மாப்பிள்ளை வீட்டாருக்கு ஏற்பட்ட செலவுகளுக்காக நஷ்ட ஈடு கொடுப்பதாகப் பெண்ணின் தகப்பனார் சொன்னார்.

ஆனால் மாப்பிள்ளையின் தந்தையார் பெரிய சமர்த்தர். 2,000 ரூபா வரதட்சிணையையும், பண்ட பாத்திரங்களையும், நகைகளையும் இழக்க அவர் விரும்பவில்லை. அவருக்கு இரண்டு புத்திரர்கள். மூத்தவனுக்குத் தானே பொருத்த மில்லை; இளையவனுக்குச் செய்து விடுவோமே என்று சொன்னார். ஜோஸ்யரும் இதில் தவறு இருப்பதாகச் சொல்லவில்லை. மணம் நிகழ்ந்தது. மூத்தவனிருக்க இளையவனுக்குச் செய்வதில்லை யென்றாலும், இது ஒரு அசாதாரண சந்தர்ப்பம். மாப்பிள்ளையின் தந்தைதான் கடைசியில் வெற்றிபெற்றார். பெண்ணின் ஜாதகத்துடன் பொருந்தக் கூடிய ஜாதக மொன்றைத் தம் இளைய பையனுக்குத் தயாரித்து விட்டார்!

## இத்தாலியப் பெண்களின் சமூக ஊழியம்

### சர்க்கார் உதவிபெறும் பொது ஸ்தாபனம்

வீனியோரினா ஒல்கா டி பிளாவி யென்ற இத்தாலியப் பெண்மணி பல நாடுகளையும் சுற்றிப்பார்த்து வந்த பொழுது தனது சுற்றுப் பிரயாணத்தினூடே சமீபத்தில் இந்தியாவுக்கும் வந்திருந்தார். அவர் இத்தாலியிலிருந்து தனது தோழியுடன் காரில் இந்தியா வந்தார். வழியில் யூகோஸ்லேவியா, பல்கேரியா, துருக்கி, ஸிரியா, இராக், ஈரான் முதலிய பல தேசங்களையும் பார்வையிட்டார்கள். அவரது வாசஸ்தலம் வடக்கு இத்தாலியிலிருக்கின்றது. இத்தாலியில் பெண்கள் ஸ்தாபனங்கள் வறுமையைப் போக்கவும், இன்னலுற்றோர்க்குத் துன்பந் துடைக்கவும் எவ்வளவு உதவி புரிகின்றன என்பதை அவர் 'மெயில்' பத்திரிகை நிருபரிடம் விளக்கி யிருக்கின்றார். அவர் கூறியபடி இத்தாலியப் பெண்களின் ஊழியத்தை இந்தியப் பெண்களின் ஊழியத்துடன் ஒப்பிட்டு அந்த நிருபர் தமது கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தியாவில், மாதர் மகாநாடுகள் நிறைவேற்றும் தீர்மானங்கட்குக் கணக்கில்லை; ஆனால் தாமாக முன் வந்து அக்கரையுடன் வேலை செய்வோர் மிகச் சிலர் என்று அவர் குறிப்பிட்டு ஒரு உதாரணமும் சொல்லி யிருக்கிறார். சென்னையில், பசியால் வாடும் மக்களுக்கு இலவசமாக உணவளிக்க ஒரு ஸ்தாபனம் நிறுவி, இது வகைக்கு சந்தாதார்கள் சேர்க்க மாதம் நூறு ரூபாய் சம்பளத்தில் ஒரு வாலிபப் பெண் தேவை யென்று பத்திரிகைகளில் ஒருவர் விளம்பரம் செய்தபோது, குறிப்பிடத்தக்க பதில் எதுவும் கிடைக்கவில்லை யென்றும், அந்த சங்கம் அத்தோடு மறைந்துபோய் விட்டதாகவும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். அந்த இத்தாலியப் பெண்மணி, அவர் நாட்டில், பெண்கள் எவ்வாறு சமூக ஊழியம் புரிகின்றார்கள் என்பதைப்பற்றிக் கூறிய வரலாற்றைக் கீழே காணலாம்:-

இத்தாலியில் பட்டினியால் வாடும் குடியானவர்கள் யாரும் இன்று இல்லை. எந்தப் பண்ணை வீட்டிலாவது பசிக்குது என்று சொன்னால், அவர்கட்கு உடனே உணவு கிடைக்கும்; அல்லது பாஸிஸ்டுப் பெண்கள் ஸ்தாபனங்கள் உதவி செய்யும். இந்த ஸ்தாபன அங்கத்தினர்கள் தாங்கள் செய்து வரும் இதர ஊழியங்களுடன், ஏழைகட்கு உதவி செய்வதையும் முக்கிய கைங்கரியமாகக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தப் பாஸிஸ்டு ஸ்தாபனத்தின் தலைவராக ஒரு ஸ்திரீதான் சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கிறார். இவருக்கு உதவியாகச் செல்வாக்குள்ள ஒரு கூட்டம் பெண்கள்—ஆர்கனைஸிங் ஸிக்ரட்டரிகள். இவர்கட்குக் கீழே நூற்றுக் கணக்கான பெண் ஊழியர்கள்—சமூக க்ஷேமத்துக்கு உழைப்பவர்கள். நகரங்களிலிருந்தும் கிராமங்களிலிருந்தும் இவ்வூழியத்துக் கெனத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். 'ஆர்கனைஸிங் ஸிக்ரட்டரி'களுக்கு சர்க்கார் சம்பளம் கிடைக்கிறது.

இவ்வளவு பெரிய ஸ்தாபனம், இத்தனை பெரிய ஊழியத்தை விடாது செய்வதற்குப் போதாரவாயிருப்பது பண உதவிதான். நாட்டிலிருக்கும் ஒவ்வொரு பெண்ணும் அனேகமாக இதன் மெம்பர்தான். அவள் தன் தகுதிக்குத் தக்கபடி பண உதவி செய்யவேண்டும். கிடைக்கும் பணத்திலிருந்து கம்பளியும் உபகரணங்களும் வாங்கி ஏழைகட்குச் சட்டை தைத்துக் கொடுக்கிறார்கள். உணவுப் பண்டங்களும் கொடுக்கிறார்கள். பதினைந்து பதினாறு வயதுப் பெண்களும், தாமாக முன் வந்து, எவ்விதப் பிரதி பலனும் பெறாமல் உழைக்கிறார்கள். குழந்தைகளுக்குக்கூடச் சிறு வேலைகள் உண்டு. அவரவர் நிலைமைக்குத் தக்கவாறு இந்த ஸ்தாபனம் பல பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அங்கத்தினரும் வாரம் இரண்டு முதல் நாலு மணி நேரம் இந்த ஸ்தாபனத்துக்காக உழைக்கிறார்கள்.

பிரசவ உதவி, சிசு பரிபாலனம், கர்ப்ப கால உதவி முதலிய எல்லாவற்றிற்கும் தக்க வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. வேலை செய்து பிழைக்கும் கர்ப்பிணிகள் இவ்வசதிகளைப் பூரணமாகப் பெறும்படி இந்தப் பெண்கள் ஸ்தாபனம் நன்கு சிரத்தை யெடுத்துக்கொள்கிறது.

கிராமங்களில் விளையும் பொருள்களை இத்தாலியப் பெண்கள் சரியான விலைக்கு விற்கும்படி அந்நாட்டில் நல்ல விதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. விலைவாசிகள் தாறுமாறாகப் போகாதபடி, ஒவ்வொரு பொருளுக்கும், சர்க்கார், மாதமொருமுறை விலையை நிர்ணயித்து விடுகிறார்கள்.

கோழிப் பண்ணை வைக்கவும், பட்டுப் புழு வளர்க்கவும், பட்டு நெய்யவும் சர்க்கார் உதவி புரிகிறார்கள். இத்தாலியில் பட்டு நெசவு ஒரு பெரிய கைத் தொழிலாகும்.

படிப்பின்மையைப் போக்க இத்தாலிய

## லண்டனில் பெண் போலீஸ்

லண்டன் நகரப் போலீஸ் படையில் இன்னும் பத்து ரகசியப் பெண் போலீஸாரை நியமிக்க உள்நாட்டு இலாகா சமீபத்தில் அனுமதித்தது. ஸ்காத்லந்து யார்டில் ஏற்கனவே உழைத்து வரும் பெண் போலீஸாருக்கு இது ஒரு பெரிய பாராட்டுதலாகும் என்பதில் ஐயமில்லை.

லண்டனில் முதன் முதல் 20 வருஷத்துக்கு முந்தி, போலீஸில் பெண்கள் சேர்க்கப்பட்டனர். பெண்கள் தெருக்களில் ரோந்து சுற்றிக் காவல்புரியும் செய்தி பலருக்கு ஹாஸ்ய விருந்தாக இருந்தது. பிறரது கேலிக்கு அஞ்சிப் பெண்கள் அந்த இலாகாவை விட்டே மறைந்து போவார்கள் என்று பொதுவாகக் கருதப்பட்டது. ஆனால் இன்று 140 பெண்கள் போலீஸிலிருக்கின்றனர். அது மட்டுமல்ல, போலீஸ் படையில் அவர்கள் ஒரு முக்கிய அங்கமாகவும் விளங்குகிறார்கள். சாதாரணமாக ஒரு போலீஸ்காரன் போக இயலாத அல்லது கூடாத ஒரு இடத்தில் போலீஸ்காரிகள் போகக் கூடிய சந்தர்ப்பங்கள் பல இருக்கின்றன. பெண்கள் சம்பந்தப்பட்ட விஷயத்திலேதான் போலீஸ்காரிக்கு அதிகவேலை; எனினும் ஆண்கள் செய்ய வேண்டிய வேலைகளிலும் பெண் போலீஸ் பங்கு கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்களும் ஏற்படுவதுண்டு.

பெண் போலீஸ் படைக்கு, வாலிபமும் தீரமும், ஆரோக்கியமும், சமயோசித புத்தியும் உடையவர்களையே தேர்ந்தெடுக்கிறார்கள். இப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்களிலிருந்து ரகசியப் போலீஸ் படைக்குப் பெண்கள் பொறுக்கப்படுகின்றனர். இவர்கள் முதலில் போலீஸ் பயிற்சிக் காலேஜில் பயிற்சி பெற்று, முதல் சிகிச்சை முறையையும் கற்றிருப்பார்கள். தற்காப்பு, அறிக்கை தயாரிப்பு, சாட்சியம் கூறுதல், கைதுசெய்தல், இன்னும் இவை போன்ற பல துறைப் பயிற்சியும் அவர்கள் பெற்றிருக்க வேண்டும்.

கான்ஸ்டபிளாகக் குறைந்தது இரண்டு வருடமாவது உழைத்திருக்க வேண்டும். இப்பொழுது ரகசியப் போலீஸில் 6 பெண்களே இருக்கிறார்கள். இவர்கள் ஐரிஷ் புரட்சி வீரர்களின் கொட்டத்தை அடக்குவதில் அதிக உதவி புரிந்தனர். பல சமூகக் கொடுமைகளைத் தடுப்பதிலும் உழைத்திருக்கின்றனர்.

---

1937ல் கிரேட் பிரிட்டனில், ரோடுகளில் செய்த போக்குவரத்து சம்பந்தமான குற்றங்களுக்காக, 3,42,000 பேர்கட்கு மொத்தம் 423,000 பவுன் அபராதம் விதிக்கப்பட்டது.

---

சர்க்கார் செய்யும் முயற்சி சாலச் சிறந்ததாகும். எல்லாவிடங்களிலும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் புத்தகசாலைகள் இருக்கின்றன. இரண்டு பைசாவுக்குச் சமமான தொகை கொடுத்து ஒரு புஸ்தகம் கடன் வாங்கிப் படிக்கலாம். பல உயர்ந்த புஸ்தகங்கள் இந்தப் புத்தகசாலைகளி லிருக்கும்.











## ஆத்தூரில் இயற்கை வைத்திய மகாநாடு

ஆத்தூரில் பிப்ரவரி 3உ தமிழ் மாகாண மகாநாட்டை யொட்டி இந்திய இயற்கை வைத்திய மகாநாடும் நடைபெற்றது. புதுக்கோட்டை டாக்டர் கி. லக்ஷ்மண சர்மா பி. ஏ., பி. எல், என். டி., தலைமை வகித்தார். ஸ்ரீ வி. முத்துரங்க முதலியார் மகாநாட்டைத் திறந்து வைத்து, இந்திய ஆயுர்வேத வைத்தியத்தின் சாரந்தான் இயற்கை வைத்தியம் என்று குறிப்பிட்டார். ஸ்ரீமான்கள் வெங்கட சுப்பையா, யம். யல். ஏ.,வி. எஸ். சத்திய நாராயண, பிக்ஷு சுவாமிகள் முதலியோர் பேசினர். கட்டாய முறையில் அம்மை குத்துதலைக் கண்டித்தும், நன்கு தீட்டப்பட்ட அரிசியைத் தயாரிப்பதையும், விற்பதையும் தடுக்க வேண்டுமென்றும், இயற்கை வைத்தியத்தை உடனேயே அங்கீகரிக்குமாறு சர்க்காரைக் கேட்டுக் கொள்வதாயும் பல தீர்மானங்கள் நிறைவேறின. தலைவர் உரையின் முக்கிய பகுதிகள் வருமாறு:—

உலகத்தில் அநேகவித வைத்திய முறைகளிருந்தாலும், மற்றெல்லாவற்றிற்கும் இல்லாத பல முக்கியமான குணங்கள் இயற்கை வைத்தியத்துக்கு உண்டு. மற்றெந்த வைத்தியத்திலும் மனிதன் பிறருக்கு ஆதீனமாகாமல், சுதந்தரமாய், தனக்குத் தானே வைத்தியனாய், இருப்பது முடியாது. இயற்கை வைத்தியம் ஒன்றுக்குத்தான் அச்சிறப்பு உண்டு. செயற்கை வைத்திய அறிவு மிகவும் விரிவாயுள்ளது; அவற்றில் ஒன்றிலுள்ள நூல்களை எல்லாம் படித்து, அனுபவ ரீதியாய் சோதித்து, அதிலுள்ள ஸாராம்சங்களை ஒருவன் தனதாக்கிக்கொள்ள ஒரு புருஷ ஆயுள் போதவே போதாது. ஆனால் இயற்கை வைத்தியத்தின் அறிவு மிகச் சுருக்கமாயுள்ளது; கற்றுக்கொள்ளவும் மிக எளிது; சிறுவர் முதற்கொண்டு யாரும் கற்றுக்கொண்டு, அனுஷ்டிக்க இயலுகிறது. செயற்கை முறைகளில் நோய்களுக்கு நாமகரணம் செய்து, அவற்றை வெவ்வேறாக மதித்து வைத்தியம் செய்வது போல், இங்கு ஒன்றும் கிடையாது. இயற்கையில் நோய்கள் எல்லாமும் ஒன்றே; அவற்றின் சிகிச்சையின் முறையும் பெரும்பாலும் ஒன்றே. இதனால் இயற்கை வழி மிக மிக எளிதாகியிருக்கிறது. இது அனுபவித் தறிந்த உண்மை. இயற்கையில் உயிருக்கு அபாயகரமானவை தள்ளுபடி; நச்சுப் பொருள்கள்—பாதரஸம் முதலிய பாஷாணங்கள்—நம்மில் வழங்குவது கிடையவே கிடையாது, உணவுபோல் தாராளமாய் உட்கொள்ளத்தகும் பச்சிலைகள், காய்கறிகள், பழங்கள், இவைகளே நம் மருந்துகள். இவை தவிர-வேறு, நச்சுத் தன்மையுள்ள மருந்துகளை உபயோகிக்கும் வைத்தியர் தினே தினே ஆயுள் முடிவடையாத எண்ணிறந்த பேரை உடலை விட்டுப் பிரித்தனுப்பிக் கொண்டிருப்பது கண்கூடு. இயற்கையில் அகால மரணம் ஏற்படுவது கிடையாது. செயற்கையை மறுத்து, இயற்கையை அடைக்கலம் புகுந்தோர், நாளுக்கு நாள் ஆரோக்கிய உயர்வு பெற்று, நீண்ட ஆயுளுடன் வாழ்வதும் தவிர, அவரது ஸந்ததியார் அவரைவிட உயர்வான உடல் நலத்துடன் அமைவதும் அனுபவஸித்த உண்மை. ஒரே ஒரு நியமம் மட்டிலும் மிக முக்கியமானது: என்ன நேர்ந்தாலும், இயற்கையின் வழிப்பட்டவன் செயற்கை முறைகளை மறுபடி நாடக்கூடாது; செயற்கை மருந்துகளை உண்ணக்கூடாது; அவை தரும் வைத்தியரை நாடக்கூடாது. இது ஒன்றே அதிக நலம் தரும் நியமம் என்று நான் சொல்வேன். அநேக அத்தாக்ஷிகள் உண்டு.

ஸயன்ஸினால் இப்போது மருத்துவத் துறையில் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகள் ஆதிமுதலே இயற்கையின் அடிப்படையான உண்மைகளே. காய்கறிகள், பழங்களின் தோல்கள், பச்சிலைகள், முதலியவற்றின் உத்தம குணங்கள் இன்னும் இந்த மருத்துவருக்கு விளங்கினபாடில்லை; இவை இயற்கை வைத்தியர் ஆதிமுதலே ஆதரித்தவை. மருத்துவ முறைகளில் குவிந்து கிடக்கும் ஊழல்களைச் சீர்திருத்துமாறு, பிரிட்டனில் ஒருமருத்துவஸங்கம் (The Health Education & Research Council) ஏற்பட்டிருக்கிறது. அதில் பட்டம்பெற்ற 60 டாக்டர்கள் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் பெரும்பாலும் இயற்கை வைத்தியமே மேலானது, அதை அனுஷ்டிக்கப் போதிய மனப் பக்குவம் தான் பொதுமக்களுக்கில்லை, என்று எண்ணுகிறார்கள். பொது மக்களின் உடல் நலத்துக்கு ஹித சத்துருக்கள் பலர் உண்டு. அவர்களில் மருத்துவர் தலைமை ஸ்தானம் வகிக்கிறார்கள். குத்தம்மை முதலிய மூர்க்கத்தனமான மருத்துவ முறைகளால் மனித இனத்தையே அவர்கள் அழித்து வருகிறார்கள். இதற்குக் காரணம் நாம் அவரிடம் வைக்கும் நம்பிக்கையே. மருத்துவ முறைகளைக் கட்டாயச் சட்டங்களால் அமுல் நடத்துவதே முறையாகியிருக்கிறது. இது அநியாயம். இவ் அநியாயத்தை நாம் ஒழிக்க வேண்டும்.

இயற்கை வைத்தியம் உலகத்துக்குத் தேவையானது. அதற்கு எல்லாரும் உதவி செய்யவேண்டும். அதற்குள்ள விரோதிகளை நீதி வழியில் நிறுத்தவும் உதவ வேண்டும்.

### விடுதலை

ஸ்ரீ S. P. பழனியப்ப செட்டியாரை ஏமாற்றியதாக, ஸ்ரீமான்கள் S. சுப்பையா செட்டியார், S. V. S. வீரப்ப செட்டியார், இடும்பன் செட்டியார், M. S. V. வீரப்ப செட்டியார் முதலியோர்மீது தொடரப்பட்டிருந்த வழக்கில், ராமனாதபுரம் ஜாயிண்டு மாஜிஸ்திரேட் எதிரிகள் குற்றவாளிகள் அல்லவென்று விடுதலை செய்தார். மனுதாரரை வஞ்சகமாக 4,500 ரூபாய்க்குப் புரோ நோட் எழுதும்படி தூண்டியதாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருந்தது.

## உள்நாட்டுச் செய்திகள்

### பெற்ரோர் சங்கம், காரைக்குடி

காரைக்குடி சிவன்கோவில் முனிசிப்பல் ஸ்கூல் பெற்ரோர் சங்கத்தின் மாதாந்தக் கூட்டம் 11-2-40ல் ஸ்ரீ S. ராஜாமணியய்யர் தலைமையில் நடைபெற்றது. முன்விபல் ஸ்கூல்களில் படித்து 5-ம் வகுப்பு பரிக்ஷையில் தேறி ஹைஸ்கூலில் சேரவிரும்பும் மாணவர்களை எவ்வித பரீக்ஷையும் இல்லாமல் ஹைஸ்கூலில் 6ம் வகுப்பில் (I Form) சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று ஹைஸ்கூல் தலைமை ஆசிரியரையும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் இச்சங்கம் கேட்டுக் கொள்கிறது என்பதும் மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேறின.

### திருக்கோஷ்டியூர் M. S. M. M. தெக்ஷிணாமூர்த்தி வைத்தியசாலை

ஷை வைத்திய சாலையில் சென்ற ஜனவரி மாதம் மொத்தம் 884 பேர் சிகிச்சை பெற்றிருக்கின்றனர்.

### ஆவினிப்பட்டி விவேகாநந்தர் கல்விக்கழகம்

31-1-40ல் விவேகாநந்தர் கல்விக்கழகத்தில் ஸ்வாமி விவேகாநந்தரின் 78-வது ஜன்மதின விழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. காலை 11 மணியளவில் ஸ்வாமிஜீயின் படத்திற்கு பூஜை நைவேத்யங்கள் ஆனதும் படம் மோட்டாரில் ஊர்வலமாகக் கொண்டுவரப் பெற்றது. பிற்பகல் சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயம் தலைமையாசிரியர் ஸ்ரீ சுப்ரமண்ய அய்யர் B. A., L. T. அவர்கள் தலைமை வகித்தார்கள். குருவிக்கொண்டான் பட்டி ஸ்ரீ கே. வி. கன்னய்யர், ஸ்ரீ ராமகிருஷ்ண பிள்ளை இருவரும் ஸ்ரீ விவேகானந்தரைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர். தலைவரவர்கள் தமது பின்னுரையில் விவேகாநந்தரின் மேனுட்டு விஜயம் என்னும் பொருள்பற்றிப் பேசினர்கள்.





### புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம்

இச்சங்கத்தின் மாதக் கூட்டம் தைமீ 23-௳ (5-2-40) திங்கட்கிழமை மாலை 5½ மணிக்கு திரு. வெ. பெரி. வீர. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலை மாணவ மாணவிகளின் பாட்டு, பேச்சு, நடிப்பு முதலியன நடைபெற்றன.

### கிளை ஆபீஸ் திறப்பு

சென்னையில் பிரபல சிற்பியாகவும் இஞ்சினீயராகவு மிருந்து வரும் ஸ்ரீ வி. எம். நரசிம்ஹன் B.A., B.E. தம்முடைய கிளை ஆபீசைக் காரைக்குடி கல்லுக்கட்டியில் ஸ்தாபித்துள்ளார். அதனை 10-2-40 சனிக்கிழமை பகல் 12 மணிக்கு ஸ்ரீ மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் திறந்து வைத்தார். நகரப் பிரமுகர்கள் பலர் வந்திருந்தனர். குரூப் போட்டோ எடுக்கப்பட்டது. கமிஷனர் ஸ்ரீ புருஷோத்தம், டாக்டர் ரத்தினசாமி, ஸ்ரீ சா. கணேசன், ஸ்ரீ எஸ். எல். என். மூர்த்தி, ஸ்ரீ திருமலை ஐயங்கார் முதலியோர் பேசினர். ஸ்ரீ நரசிம்ஹன் வந்தனம் கூறினர். வந்திருந்தோருக்கு சந்தனம், புஷ்பம், ஷர்பத் வழங்கப்பட்டன.

### ஷண்முகநாதபுரம் ஜவஹர் வாசகசாலை

இவ்வாசகசாலைக் காரியதரிசி திரு. சொ. மெய்யப்பன் அவர்கள் மலாய் நாடு செல்வதின் பொருட்டு 1—2—40 வியாழக்கிழமை மாலை 4 மணிக்கு தேநீர் விருந்தும் இந்நகர் திரு. தெ. பெ. நாகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் பிரிவுபசாரக் கூட்டமும் நடைபெற்றன.

### அரவன்கிரி உற்சவம்

ஐந்து நிலை நாட்டார்களால் நடத்தப்பெறும் அரவன்கிரி மாசி மக உற்சவம் (அரளிப்பாறை ஜல்லிக்கட்டு) மாசிமீ 11௳ (23-2-40) வெள்ளிக்கிழமை நடைபெறும்.



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

